சென்னையில் : பிரசித்திபெற்ற மைசூர் அவதூத தத்த பீடாதிபதி

# ஸ்ரீ ஸ்ரீ கணபதி சச்சிதானந்தா ஸ்வாமிஜி வழங்கும்

# நாத சிகிச்சை இசை நிகழ்ச்சி!

**(Music Therapy for Healing & Meditation for various Ailments)**

27.02.2010
சனிக்கிழமை
மாலை 6.30 மணி



Sri Sri Ganapathi Sachidananda Swamiji

27th FEB. 2010
6.30 P.M.

இடம் :
ஸ்ரீ ராமச்சந்திரா மருத்துவமனை சிட்டி சென்டர்,
டாக்டர். வாசுதேவா நகர்,
[திருவான்மியூர் பஸ்நிலையம் பின்புறம்]
திருவான்மியூர், சென்னை – 600 041.

Venue :
SRI RAMACHANDRA HOSPITAL CITY CENTRE,
Dr. Vasudeva Nagar,
(Behind Thiruvanmiyur Bus Terminus),
THIRUVANMIYUR, CHENNAI - 600 041.

**இலவச அனுமதி சீட்டுகளை கீழ்கண்ட இடங்களில் 15.02.2010-க்கு பின்னர் நேரில் பெற்றுக்கொள்ளலாம்**

Free Entry Passes can also be collected at the following centres given below :

1. CONNEXIONS BOOK STORES (All Outlets) 2. VELACHERY ASHRAM , Chennai - 42
3. TRINITY ACUTE CARE HOSPITAL, Alwarpet, chennai - 18

**மேலும் விபரங்களுக்கு :**

**ஸ்ரீ கணபதி சச்சிதானந்தா ஆஸ்ரமம், சச்சிதானந்தா நகர், பேபி நகர்,**
**(Near Hot Chips), வேளச்சேரி, சென்னை – 600 042.**
**Website : www.dattapeetham.com E-mail : sgstrustchennai@gmail.com**
**044-22433879, (0) 99623 95830, 99623 95831**

# உள்ளே...







# பிரதமர் ஆவாரா சிதம்பரம்?

● டில்லியில் காங்கிரஸ் மேல் மட்டங்களில் சமீபகாலமாகக் கிசுகிசுக்கப்படும் ஒரு விஷயம், வரும் பட்ஜெட் கூட்டத்துக்குப் பிறகு மன்மோகன் சிங் அரசியலிலிருந்து ஓய்வு பெற்று விடுவார் என்பதும், பிரதமர் பொறுப்புக்கு ப.சிதம்பரம், உயர்த்தப்படுவார் என்பதும்தான். 2014 தேர்தல் வரை பிரதமர் பதவியில் இருப்பாராம் சிதம்பரம். அதன்பிறகுதான் ராகுல் இன்னிங்ஸ் துவங்குமாம். இந்தக் கிசுகிசுக்களுக்கு வலு சேர்ப்பது போலத் தான் ப.சி.யின் செல்வாக்கு கிராஃப் ஏறிக்கொண்டே போகிறது. இந்தியாவில் உள்ள செல்வாக்குள்ள முதல் ஐந்து பிரமுகர்களுள், பிரணாப் முகர்ஜியையும் பின்னுக்குத் தள்ளி விட்டு நான்காவது இடத்தில் இருக்கிறார் உள்துறை அமைச்சர். இதற்குக் காரணம் உள்துறை இலாகாவின் செயல்பாடுகளை ஜெட் வேகத்தில் முடுக்கிவிட்டது மட்டுமல்லாமல், நக்ஸலைட் மற்றும் எல்லை கடந்து வரும் தீவிரவாதத்தை நசுக்க அவர் எடுத்துவரும் நடவடிக்கைகள்தான் என்கிறார்கள். ''அவர் செயல்திட்டம் வெற்றியடைந்தால் தீவிரவாதம் கிட்டத்தட்ட கட்டுப்படுத்தப்பட்ட நிலைக்குச் சென்று விடும்'' என்கிறார் உள்துறை மூத்த அதிகாரி ஒருவர். அதிகாரவர்க்கத்தை எப்போதும் விழிப்பு நிலையில் வைத்திருக்கும் ப.சி., சோனியா, ராகுலுடன் மிகுந்த நல்லிணக்கத்தோடும் இருக்கிறாராம். புதிய தேசிய பாதுகாப்பு ஆலோசகர் நியமன விஷயத்தில் ப.சி., சிபாரிசு எடுபடவில்லை. ''ஆனால் உள்நாட்டுப் பாதுகாப்பு தொடர்பான விவகாரங்கள் (Internal Security) பற்றி உள்துறை அமைச்சகம் பார்த்துக்கொள்ளும் என்று ப.சி. சொன்னதை, பிரதமரும் சோனியாவும் ஏற்றுக் கொண்டதிலிருந்து அவரது செல்வாக்கு புரியுமே'' என்கிறார்கள் உள்துறை அதிகாரிகள். நாராயணன் தேசியப் பாதுகாப்பு ஆலோசகராக இருந்தபோது இந்த விவகாரத்தையும் சேர்த்துத்தான் கவனித்தாராம். ''பொதுவாக சுதந்திர இந்தியாவில் உள்துறை அமைச்சர்களாக இருந்தவர்களின் வரலாற்றைப் பார்த்தால் அவர்கள் அந்த நிலைக்கு மேல் உயர்ந்ததாகத் தெரியவில்லை'' என்று சொல்கிறார் காங்கிரஸ் பாராளுமன்ற உறுப்பினர் ஒருவர். அரசியலில் யாருக்கு ஜாக்பாட் எப்போது அடிக்கும் என்று தெரியாது என்பதுதானே பொதுவான விதி.

● கப்பல் துறையின் மீது கொஞ்சமும் நாட்டம் காட்டாத ஜி.கே.வாசன், தமிழக காங்கிரஸ் தலைவர் பதவியைப் பிடிப்பதில் குறியாக இருக்கிறார். ''எனக்கு ஏதாவது லைட்டான துறையைக் கொடுத்து, என்னைத் தமிழக அரசியலில் செயல்பட அனுமதியுங்கள்'' என்று தலைமையிடம் கேட்டுக் கொண்டிருக்கிறாராம். அவருக்கு 'வெளிநாட்டு இந்தியர் விவகாரத் துறை'யைக் கொடுக்கலாம் என்கிறார்கள். வாசன் தமிழக அரசியலுக்குத் திரும்ப துடிப்பதற்குக் காரணம், 2011 சட்டமன்றத் தேர்தலில் அவரது ஆதரவாளர்களுக்கு டிக்கெட் வாங்கித் தரும் பொறுப்பு அவருக்கு இருக்கிறது. ஆனால், ஈ.வி.கே.எஸ்.இளங்கோவனும் தலைவர் பொறுப்புக்கு முயற்சி செய்கிறார். போட்டி கடுமையாகவே இருக்கிறது.





மற்றொரு பக்கத்தில் தங்கபாலுவும் தமக்கு ஆபத்து வராமல் இருக்க மல்லுக் கட்டுகிறார்.

● சென்னையில் தீண்டாமை உறுதிமொழி எடுக்கவேண்டிய அன்று 21 அமைச்சர்கள் மிஸ்ஸிங்! இதைக் கண்ட முதல்வர் அமைச்சர்களிடம், ''இதுபோன்ற உறுதிமொழி எடுக்கும்போது கூடிய மட்டும் அமைச்சர்கள் வெளியூர் போவதைத் தவிர்க்க வேண்டும். அவசியம் என்றால் சொல்லி விட்டுச் செல்ல வேண்டும்'' என்று அறிவுரை கொடுத்துவிட்டார். வராத அமைச்சர்களுக்குக் கொடுக்கப்பட்ட கடிதத்தின் நகல், அன்று உறுதிமொழி எடுத்துக்கொண்ட அமைச்சர்களுக்கும் அனுப்பப்பட்டது என்பதுதான் ஹைலைட்!

- சஞ்சயன்





# கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர்:
**லக்ஷ்மி நடராஜன்**

ஆசிரியர் : **சீதா ரவி**

உதவி ஆசிரியர்கள் :
**கதிர்பாரதி, அமிர்தம் சூர்யா**

வடிவமைப்பு :
**எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன், பா.கோபால்**

தொலைபேசி : 044 - 4343 8888
தொலைநகல் : 044 - 4343 8899

**ஆசிரியர் குழு :**
044 - 4343 8822
kalki@kalkiweekly.com

**விளம்பரப் பிரிவு :**
044 - 4343 8811
marketing@kalkiweekly.com

**சந்தா பிரிவு :**
044 - 4343 8833
subscription@kalkiweekly.com

**விற்பனை பிரிவு :**
044 - 4343 8844
sales@kalkiweekly.com

இன்டர்நெட் முகவரி :
**www.kalkionline.com**





**சந்தா விவரம் (ஒரு வருடம்) :**
உள்நாடு : ரூ.500/-
வெளிநாடு : ரூ.3,800/-

கல்கி பில்டிங்ஸ்,
47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காட்டுதாங்கல், சென்னை - 32

**நாம் திண்டுக்கல் மாவட்ட விஸிட்டை மேற்கொண்டது பொங்கல் பண்டிகையையொட்டி. தொகுதி எம்.எல்.ஏ. பாலபாரதியைச் சந்தித்தபோது கவலை பொங்கும் முகத்துடன் பேசினார்...**

"திண்டுக்கல்ல முன்பெல்லாம் பொங்கலுக்கு ஒரு மாசத்துக்கு முன்னாடியே அந்தப் பரபரப்பு தொற்றிக்கும். பக்கத்துக் கிராமங்கள்லேருந்து சாரை சாரையாக வருவாங்க. வீதிகளும் மார்க்கெட்டும் கொண்டாட்டத்துக்குரிய இடமா இருக்கும். இப்போ நீங்களே பாருங்க... பொங்கல் அன்னைக்குக்கூட கரும்பு விக்கறாங்க. ஒரு மாசத்துக்கு முன்னாடியே பொருட்களை வாங்கிக்கிட்டிருந்த மக்களோட வாங்கும் திறன் என்னாச்சுன்னு தெரியலை. திண்டுக்கல் தக்காளி உலக ஃபேமஸ். ஆனால், மாசத்துல மூணு நாலு தடவை அதோட விலை ஏறி - இறங்குது. ஏன் விலைவாசியைக் கட்டுக்குள்ள வைக்க முடியலை இந்த அரசாங்கத்தால? இதையெல்லாம் செய்யாம இரண்டு ரூபாய் அரிசி மட்டும் விலை குறையாம பாத்துக்கறாங்க. இதுக்கு ரெண்டு காரணங்கள்: ரெண்டு ரூபாய் அரிசிதான் வோட்டா மாறும்; பினாமிகள் கடத்தவும் சரியா இருக்கும்! விலை வாசியைக் கட்டுப்படுத்தாம, 'பாலம் கட்டினோம், ரோடு போட்டோம்'னு பெருமையாச் சொல்லிக்கறது எந்தவிதத்துல சாதனை?"

**பஞ்சாலைகள் அதிகமான மாவட்டம் திண்டுக்கல் தானே?**

"ஆரம்பத்துல திண்டுக்கல் வந்து





பஞ்சாலைகள் ஆரம்பிச்சாங்க திருப்பூர்க் காரங்க. இப்படி ஆரம்பிச்ச 150 பஞ்சாலை கள்ல கூலி ஒரே மாதிரி இல்லை. சில இடங்களில் 90 ரூபாயும், சில இடங்களில் 180 ரூபாயும் கொடுத்துட்டு இருந்தாங்க. 1990களில் வந்த தொழிலாளர் சட்டத்தால ஆயிரம் தொழிலாளர் இருந்தாத்தான் தொழிற்சங்கச் சட்டத்துக்குள் தொழிலாளர்களைத் திரட்ட முடியும் என்பதால், அந்த வாய்ப்பும் நழுவிப் போய் தொழிலாளர்கள் நலம் பாதிக்கப்பட்டு வருது. திண்டுக்கல் நோக்கி திருப்பூர்க் காரர்கள் வந்தது போய்,

# ரோடு போடுவதும்... பாலம் கட்டுவதும்... சாதனையா?

-வெடிக்கிறார் பாலபாரதி

திருப்பூரை நோக்கிப் போகிற அவலம் இப்போது நிகழ்கிறது. பூட்டும் அப்படித் தான். திண்டுக்கல் பூட்டுக்குப் பெரிய பூட்டு விழுந்துருச்சு. நகராட்சியைச் சுற்றி குழிபறிக்கப்பட்டு ரோடு போடறோம். சாக்கடை தூர்வார்றோம்னு கமிஷன் வாங்கி கல்லா கட்டுறாங்க. திண்டுக்கல் நகராட்சி யில குடிதண்ணீர்ப் பஞ்சம் அதிகம். இரண்டு ரூபாய்க்கு ஒரு குடம் தண்ணி விக்கறாங்க. நகராட்சிக்குன்னு குடிதண்ணீர் வசதிக்காக ஒதுக்கப்பட்ட காமராஜர் குடிநீர்த் திட்டம், வைகை பேரணைத் திட்டம், இதையெல்லாம் பத்தி ஒருமுறையாவது நகரசபையில் ஆளுங்கட்சியா இருக்கற தி.மு.க. கவலைப் பட்டிருக்குமா...?



## விலைவாசியைக் கட்டுப்படுத்த இந்த ஆட்சி முற்றிலும் தவறிவிட்டது!

பொதுக் கழிப்பறை வசதி அமைச்சாகூட அவங்களுக்கு கலெக்ஷன் வரணும்; அதைத்தான் பார்க்கறாங்க!''

**திண்டுக்கல் நகராட்சி சுகாதாரம் இவ்ளோ மோசமா இருக்கே...?**

''உண்மைதாங்க. இந்த விஷயத்துல நகராட்சியும் சரி... மக்கள் பிரதிநிதியா இருக்கற நாங்களும் சரி... கடுமையான தோல்வியைச் சந்திச்சிருக்கோம். சொல் வதற்கே கூச்சமாதான் இருக்கு. ஆனால், உண்மை இதுதானே! பாதாளச் சாக் கடையை பதினெட்டு மாசத்துல போட்டு முடிச்சுடணும். இன்னும் முடியலை. முடிஞ்சதுக்கு அப்புறம்தான் தெரியும்; சாக்கடை மேல ஓடுமா... கீழ ஓடுமான்னு. பஞ்சாலைக் கழிவு நீர் வேடச்சந்தூர் வரைக்கும் போறதால் விவசாய நிலங்கள் பாதிக்குது. அதனால விவசாயப் பொருட் களின் உற்பத்தி அளவு குறையுது. இன்னொரு உண்மையைச் சொல்லணும்னா அ.தி.மு.க. ஆட்சியில இருந்த விலைக் கட்டுப்பாடு தி.மு.க. ஆட்சியில் இல்லாமல் போனது அதிகார மையங்களின் ஆதிக் கத்தினால்தான்.''

**சுற்றுலாவுக்கு ஏதுவான மாவட்ட மாச்சே?**

''திண்டுக்கல் மாவட்டம் மழை மறைவுப் பிரதேசம் என்று ஆய்வாளர்கள் சொல்றாங்க. சுற்றி நிற்கும் மலைகள் மழையைப் பொழியவிடாமல் தடுத்து நிறுத்தி விடுகின்றன. கொடைக்கானல், பழநி இருப்பதனால்தான் திண்டுக்கல் மாவட்டம் கொஞ்சம் செழிப்பா இருக்கறது மாதிரி தோணுது. அவை மட்டும் இல்லைன்னா ரொம்பக் கஷ்டம்.''

**என்ன பண்ணணும்?**

''மூடியிருக்கற தொழிற்சாலைகளைத் திறக்கணும். விவசாயப் பொருட்கள் உற்பத்தி சார்ந்த, குறிப்பா, மாம்பழம், தக்காளி, நிலக்கடலை சார்ந்த தொழிற் சாலைகள் வரணும். முதல்ல திண்டுக்கல் மாவட்டத்தைச் சுத்தப்படுத்தணும். அர சாங்கத்தின் சார்பா பெரிய கல்வி நிறு வனங்கள் வரணும். வந்த ஒரு கல்வி நிறுவனத்தையும் அமைச்சர் நத்தம் விஸ்வ நாதன் கொண்டு போயிட்டார்'' என்று பேசிமுடித்துவிட்டு, சோர்வுடன் வியர் வையைத் துடைத்துக் கொள்கிறார் பாலபாரதி! ●



லப்டப்.. லப்டப்...

மணல் கலைத்து அந்தப் பாலையில்
தனிமையோடு கடக்கையில்
அன்பாய் ஒரு கை தோள்படர
திரும்பி கட்டிக்கொண்டு
முத்தமிட்டேன் உன் நினைவுகளை

தனித்த மாலை ஒன்றில்
துள்ளி உதிரும்
சிவந்த மஞ்சள் நிற இலைகள் சில
என் கன்னத்தை உரசிக்
கீழே விழும்போது எனக்கான
உன் முத்தமொன்றை
விட்டுச் செல்கின்றன.

—நளன்



# லவ்வர்ஸுக்கு இட ஒதுக்கீடு!

கிரிப்பாலஜி



''என்னங்க... இது புது மாதிரி ஸ்கூலு... ஏபிஸிடின்னு சொல்லித் தராம எல் ஓ வீ ஈ...ன்னுதான் வித்தியாசமா ஆரம்பிப்பாங்களாம். எல் ஃபார் லவ்வாம், எம் ஃபார் மங்கி இல்ல மாரேஜாம்... நம்ம பாப்புவ இதே ஜாலி ஸ்கூல்ல சேர்க்கலாம் மாமா... லவ்வை சப்போர்ட் பண்ற ஸ்கூலாம். லவ் பண்ணி கல்யாணம் பண்ணிக்கிட்டவங்க குழந்தைகளுக்கு டொனேஷன் கெடையாதாம்... இப்படி பிற்காலத்துல இருக்குனு தெரிஞ்சிருந்தா நா கண்டிப்பா லவ் பண்ணியிருப்பேங்க... சேலத்துல நா ஸ்கூலுக்குக் கௌம்பினா பின்னாலேயே பத்து பசங்க 'காதல் ரோஜாவே'ன்னு பாடி அம்பெல்லாம் விடுவாங்க... ஹய்யோ... கண்டுக்காம விட்டுட்டேனே...''

''ரொம்ப முக்கியம்... லவ்வு ஸ்கூல்ல சேர்க்க முடியாது. நம்ம பாப்பு வரட்டி தட்டட்டும்...''

''ஏங்க... நம்ம நன்மைக்குத்தாங்க... லவ்வு பண்ணியிருந்தா ஸ்கூல்ல ஈஸியா சீட் கெடச்சிருக்குமுல்ல... காதலை நேசியுங்க மாமோய்...'' தமிழரசி கணவரைச் சமாதானப்படுத்தினாள். கேள்விக்குறியான கணவரைப் பார்த்து, ''நாலும் தெரிஞ்ச பெரியவரு அவரு... அவரே சொல்லியிருக்காரு ஆதரவு தரச் சொல்லி... பத்து வருஷத்துக்கு முன்னாடியே சொல்லியிருக்கலாமில்லே... சேலத்துலகூட வந்து கூட்டம் போட்டாரு... சொல்லவேயில்லீங்க...'' தமிழரசிக்கு துக்கம் தொண்டையை அடைத்தது.

யாரந்தப் பெரியவர்?



**சினிமா ஸ்டோரி டிஸ்கஷன் ரூம்:**

''என்னது ஸ்டோரி சேஞ்சா? காதலுக்கு எதிர்ப்பே கெடையாதா? இத்தனை வருஷமா காதல்னா அப்பா அம்மா எதிர்க்கணும். கிராமமா இருந்தா சாதிச் சண்டை வெடிக்கணும். புள்ளைங்க வீட்டைவிட்டு ஓடணும். மலை மேலேருந்து விழறதுக்கு முன்னால ஞாபகமா கிஸ்ஸடிச்சுட்டு சரேல்னு கீழே குதிக்கணும். லவ்வுன்னா அரிவாளை எடுத்தாகணும். கிராமமே கலவரமாயிடணும்.

இப்படியெல்லாம் படம் எடுத்துட்டு, இப்போ 'வாங்க... ஒண்ணா பழகிக் குங்க... புடிச்சா கல்யாணம் கட் டுங்க'ன்னு சொன்னா சினிமா பாக்க யாரு வருவாங்க? கோடிக்கணக்கான



பணம் புரள்ற இண்டஸ்ட்ரீய்யா இது...'' தயாரிப்பாளர் சாமிவீரா கோபத்தில் குதிகுதியென குதிக்க, 'ஸார், அவரு விருப்பப்படறாரு... ன்ன இருந்தாலும் பெரியவரு...''

''யாருடா அந்தப் பெரியவரு? ன்னை ரோட்டுல கொண்டு நிறுத்திப் ார்க்க ஆசைப்படற பெரியவரு யாரு? ாதல்னா எதிர்ப்பு இருந்தாத்தான்டா த்ரில்லே... பெரியவரே கருணை காட் டுங்க...''

யாரந்தப் பெரியவர்?

**கபாலீஸ்வரர் கோயில் பிராகாரத்தில் மாமிகள்...**

''பெத்து, வளர்த்து, படிக்க வச் சாச்சு... லவ் பண்ணி ஒரு பெண்ணோட பார்க், பீச், சினிமான்னு போனாத்தானே நமக்குப் பெருமை... எங்க பிரபுவுக்குக்

கூச்ச சுபாவம்... எதிர்வீட்டுப் பொண்ணுக்கு நேத்திக்கு லவ் லெட்டர் குடுக்கச் சொன்னேன். ரிஸல்ட் என்னன்னு தெரியல்ல. ஆபீஸ்லகூட ட்ரை பண்ணுடா, விடாதேன்னு என்கரேஜ் பண்ணிண்டிருக்கேன். பெரியவர் சொன்னதுலேருந்து ரொம்ப சிரத்தையா செஞ்சுண்டிருக்கேன். அந்தக் கற்பகாம்பாதான் காதலைக் கொடுக்கணும்'' கிரிஜா மாமி பரவசமாக, ''எங்க கிரீஷ் ராத்திரி பத்து மணிலேர்ந்து அர்த்தஜாமம் வரைக்கும் நெட்ல சாட் பண்றான். இப்பத்தான் கொஞ்சமா லவ் வரதுன்னு சொல்றான். எனக்கு ஏக த்ரில். ஏதோ 'பெரியவர்' சொல்றாரேன்னு நானும் மாறிட்டேன்... லவ்வு வந்தா சரி. ஆதரவு தந்தா போச்சு'' சரோஜா மாமி சப்போர்ட் மாமியாகி ஆர்ப்பரித்தார்.

**அது சரி... யாரந்தப் பெரியவா?**

எதிர் வீட்டுப் பெண்ணுக்கு
நேத்திக்கு லவ் லெட்டர்
குடுக்கச் சொன்னேன்.
ரிஸல்ட் என்னன்னு தெரியல.



## ஜோசியர்கள் மாநாட்டில் இருவர்...

''பரிகாரம் பண்ணினாத்தான் கல்யாணம் நடக்கும், செவ்வா தோஷம்னு எல்லாம் பிரம்மாஸ்திரம் வைச்சிருந்தோமே... லவ் மாரேஜ்னா அது அடிபட்டுப் போயிடுமே... ஆனானப்பட்ட ஐஸ்வர்யா ராயையே அமிதாப் கோயில் கோயிலா அழைச்சுண்டு பரிகாரம் பண்ணினாரே...'' ஜோசியர் துர்வாசா நீளமாகப் பேச... ''ஒன்பதாம் இடத்துலேர்ந்து ராகு பாக்கறான். ஏழாம் இடத்திலேர்ந்து கேது...ன்னு சொன்னா நம்மள இடைமறிச்சு, 'பொண்ணும் பையனும் ஒருத்தரையொருத்தர் பாக்கட்டும். நீங்க இடத்தைக் காலி பண்ணுங்க'ன்னு பெற்றோர் விரட்டறாங்க. இவங்க 'வெவரமா' இருந்தா நம்ம பிஸினஸ் என்ன ஆகறது? பெயர்ல எக்ஸ்ட்ராவா ஒரு 'எஸ்' நாலு 'ஆர்' சேர்த்தா லவ் சக்ஸஸ்னு சொன்னோம். விரலுக்கு ஒண்ணா வைரம், முத்து, பவழம்னு போட்டா லவ்வு ஓஹோன்னு ஆருடம் சொன்னோம். இப்படி 'பெரியவர்' பேசலாமா? இனி நம்ம எதிர்காலம் எப்படின்னு அவருதான் சொல்லணும்'' என்றவழி மொழிந்தார்.

அது சரி யாரந்தப் பெரியவர்? லவ்வுக்கு ஆதரவு சொன்னவர் நம் மதிப்புக்குரிய சி.எம்.தான்!

மிஸ்டர் சி.எம். உங்களுடைய பொன்மொழி, மக்களிடையே எப்படி ரீச்சாயிருக்கிறது... பார்த்தீங்களா?

**லதா சேகர்**

“**சா**ர்... ஓங்க செருப்பைக் கழட்டி வெச்சுட்டு உள்ளே வாங்க!” எனச் சொல்லி ஊர் மந்தைக்கு வெளியே நம்மைத் தடுத்து நிறுத்துகின்றனர். அட... இது என்னா புதுசா இருக்கே... என நினைக்கிறோம். அவர்கள் சொன்னதைச் செய்த பிறகு, அவர்களுடன் சேர்ந்து நடக்கத் தொடங்குகிறோம். அவரவர் கால்களில் செருப்பு! “என்னா ஆஞான்... என்னிய மட்டும் கழட்டச் சொல்லிட்டு, நீங்க எல்லாரும் செருப்பு போட்டு நடந்து வர்றீக. இது எந்த ஊரு ஞாயம்?” எனக் கேட்க, “அப்பிநாயக்கன்பட்டி கிராமத்து ஞாயம்ங்க இது” பட்டென்று பறக்கிறது பதில்.

திண்டுக்கல் மாவட்டம் அய்யலூர் அருகே, அப்பிநாயக்கன்பட்டி கிராமம். சுமார் நூறு குடும்பங்கள். அவர்கள் அனைவரும், இந்து ராஜகம்பளத்து நாயக்கர்கள். கோடாங்கிகள் அல்ல. குடுகுடுப்பைக்காரர்கள் அல்ல.

**பெ**ரிய கூம்பாச்சியைக் கவுத்துப் போட்ட சைஸுல வீடுக. அந்த வீடுகளுக்கு வட்ட வடிவான செம்மண் சுவர். அந்த வட்டத்துக்கு மேல பத்தடி உயரத்துல கூம்பாச்சியா ஒரு கூரை. குச்சி வீடுனு சொல்றாக. “நூறு வருஷம் ஆனாலும், இடிஞ்சு விழுந்துடாது. அத்தினி ஸ்ட்ராங்கு. அதுக்கும் மேல பத்தடி உயரத்துக்கு கூம்பாச்சியா நாங்க போடுற கூரை, காட்டுச் சோளத் தட்டையால வேய்றது. அஞ்சு வருஷமானாலும் ஒழுகாது. சும்மா உள்ளார குளுகுளுனு இருக்கும்!” என்கிறார் பால சுப்பிரமணியன்.

ஒரு பொண்ணு பெரிய மனுஷியான வுடனே ஊர் எல்லையில ஓலை வீடு ஒண்ணு கட்றாங்க. பத்து, இருபது நாள் பொண்ணு அங்கேயே தங்க, பொண்ணு வீட்டைச் சேர்ந்தவங்க, ஓலை வீட்டுக்கு வெளியே தங்குவாங்க. குறிப்பிட்ட நாளில், சடங்கு சுத்தி ஊருக்குள்ளார கூட்டிக்கறாங்க. அந்த ஓலைக் குடிசையைத் தீ வெச்சு கொளுத்திடுறாங்க.

**இ**வங்கள்ல மூணு நாள் கல்யாணம் அந்த மூணு நாளும், ஊரே திருவிழாக் கோலம்தான். சடங்குகள் எக்கச்சக்கம் அதுகளைச் செஞ்சு வைக்கிறதுக் குன்னே இவுக ஆளுகள்லயே

# மது அருந்தினவங்களுக்கு



(அர்ச்சகர், குருக்கள் மாதிரி), சில ஆளுகளை நியமிச்சு வெச்சிருக்காங்க. அதுல ஆண்களும், பெண்களும் இருக்காக. மூணு நாள் கல்யாணச் சடங்கு செய்ற நேரங்கள்ல இந்த ஊரு ஆம்பளைகளும், பொம்பளைகளும் சட்டை, ரவிக்கை அணிய மாட்டாங்க. வெளியூர்லேருந்து விருந்தாளியா வர்றவங்களுக்கு இந்தக் கட்டுப்பாடு இல்லை.

''மொத நாளு மந்தையில அஞ்சாறு உரல்ல, வயசுக்கு வராத பொண்ணுங்க வந்து நெல்லு போட்டுக் குத்துவாங்க. அரிசியாக்கி அதை ஒரு வெகுமதியா கொண்டு போய் பக்கத்து ஊரு வேளார்ட்ட மாலை மருவாதையோட தருவோம். அவரு கல்யாணச் சடங்குக்குத் தேவையான பானைச் சட்டி, கலயங்களோட எங்க ஊருக்கு வருவாரு. அம்பது அறுபது கலயம் இருக்கும். மூணு நாளும் அத்தினி சடங்கு நிறைவேறும்!'' என்கிறார் தேவராட்டம் ஆடும் பொம்மி நாயக்கர்.

''முத்தாளம்மன் - புள்ளையார் கோயிலு. அந்த மந்தையிலதான் எல்லாம் நடக்கும். மொத நாளு பொண்ணைக் கூட்டி வர்றது. மறுநாளு தாலி கட்றது. அதுக்கும் மறுநாளு பொண்ணு மாப்பிள்ளை ஜோடியா வீட்டுக்குப் போறது. இந்த மூணு நாளும் பெரிய திருவிழா மாதிரிதான்!'' எனச் சொல்கிறார் ஊரின் 'முத்தாலு பெத்த' என்றழைக்கப்படும் மாதி நாயக்கர்.

''எங்க ஊரு ஆளுங்க யார்க்குமே மதுப் பழக்கம் கிடையாது. பீடி, சிகரெட் இல்ல. பெட்டிக் கடை, டீக்கடை கூட இந்த ஊர்ல இல்ல. எங்க ஊரு ஆளுங்க மது அருந்தக் கூடாது. புகைப் பிடிக்கக் கூடாது. இதை இந்த ஜெனரேஷன் வரைக்கும் கட்டுப்பாடா காப்பாத்திட்டு வர்றோம். அது போல ஊருக்குள்ளார வர்ற வெளியூர் ஆளுங்க, 'தண்ணி' போட்டிருந்தாலோ, புகைப்பிடித்தாலோ அவங்களை உள்ளே விடுறதில்ல. செருப்பைக் கழட்டி வெச்சுட்டு வர்ற மாதிரி, மது-புகை ரெண்டையும் அந்த நேரத்துல கழட்டி வெச்சுட்டு வந்தாத்தான் ஊருக்குள்ள அனுமதி!'' என்கிறார் அப்பிநாயக்கன்பட்டி கிராமத்தின் முக்கியஸ்தரான 'கம்பிளி நாயக்கர்' எனப்படும் அப்பிநாயக்கர்.


* மாதி நாயக்கர்


* அப்பி நாயக்கர்


* பாலசுப்பிரமணியன்

# நோ என்ட்ரி!






அதிசய கிராமம்!



# கல்கி



2010 பிப்ரவரி 14
விரோதி மாசி 2
மலர் : 68
இதழ் : 29

தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - *பாரதியார்*

## தாக்கரே சகோதரர்களின் மூர்க்கம்!

**ச**ண்டை போட்டுச் சிண்டைப் பிய்த்துக்கொண்ட ராஜ் தாக்கரே-உத்தவ் தாக்கரே இருவருமே ஒற்றுமையாய் இருப்பது பிரதேசப் பித்தில் மட்டும்தான்! ''மஹாராஷ்டிரா பிற மாநிலத்தவர்க்கு அல்ல,'' என்கிற அவர்களது குருட்டுப் பிடிவாதம் அநீதி மிக்கது; யதார்த்த நோக்கில் பலவீனமானது.

பா.ஜ.க. தலைவரும் ஆர்.எஸ்.எஸ். தலைவரும் சொல்வதுபோல, மஹாராஷ்டிரா இந்தியர் யாவருக்கும் சொந்தமானது. இந்நாட்டின் எந்தக் குடிமகனும் தேசத்தில் எங்கு வேண்டுமானாலும் குடியேற உரிமை பெற்றவன்தான் - அரசியல் சாசனமே இதை உறுதி செய்கிறது.

ராகுல் காந்தி சொல்வதைப் போல, மும்பையில் பயங்கரவாதத் தாக்குதல்கள் நடந்தபோது (26/11) எதிர்கொண்டு போராடியவர்கள் மஹாராஷ்டிர வீரர்கள் மட்டுமல்ல; நாட்டின் பல பாகங்களிலிருந்து திரட்டப்பட்ட ராணுவத்தினரும்கூட.

மஹாராஷ்டிரம் மராட்டியர்களுக்கே என்றால், இந்தியாவின் இதர பகுதிகள் அவர்களுக்கு இல்லாது போகும். மஹாராஷ்டிராவுக்கு வெளியே அனைத்து மாநிலங்களிலும் மராட்டி மக்கள் எவ்வாறெல்லாம் தங்கள் உழைப்பு, திறமை, அறிவால் பங்களித்து, செல்வாக்கும் செல்வமும் பெற்று வருகின்றனர் என்கிற பட்டியல் மலைக்க வைக்கும்.

ஆக, தாக்கரே சகோதரர்களின் பிரிவினை பல்லவி, சுயநல அரசியல் விரிக்கும் வார்த்தைப் பந்தல்தானேயொழிய, நடைமுறைக்கேற்றதல்ல.

ஆனால், இத்தகைய வார்த்தைப் பந்தல்கள் தவறான உணர்வுகளைத் தூண்டி, எளிய மக்களை உசுப்பிவிடும். சுயமாகச் சிந்தித்து இதன் அபத்தத்தை உணர முடியாத பல லட்சம் மஹாராஷ்டிர மக்களை,

பிரதேசப் பித்து

தலைவரோட
கண்ணாடி
வழியா
பார்த்தா
மஹாராஷ்டிரா
ஜொலிக்குதே..!

ராஜ் தாக்கரே

உத்தவ் தாக்கரே




பிற இந்தியர்கள் பேரில் காரணமின்றி வெறுப்பு கொள்ளச் செய்யும், மிகச் சுலபமாக வெறியைத் தூண்டி, வன்முறை வெடிக்கச் செய்யும். எனவே, பிற கட்சியினர் இந்த விவகாரத்தில் சீரிய நோக்குடன் ஒருங்கிணைந்து செயல்பட வேண்டிய அவசர அவசியம் இருக்கிறது.

சிவசேனாவின் தேர்தல் கூட்டாளியான பா.ஜ.க, இது விஷயத்தில் வேறுபடுவதும், காங்கிரஸும் பா.ஜ.க.வும் ஒரே விதமான கருத்தில் இருப்பதும் மிக ஆரோக்கியமானது. மற்ற எந்தக் கொள்கைகளில் வேறுபட்டாலும் தேச ஒற்றுமை என்பதை விட்டுக்கொடுப்பதற்கில்லை என அக்கட்சிகளின் நிலைப்பாடு உணர்த்துகிறது. இதனை ஒரே மேடையில் அக்கட்சியினர் இணைந்து வெளிப்படுத்த வேண்டும். இந்த இலட்சிய நோக்கில் கை கொடுக்கக்கூடிய இதர கட்சியினர், தனியார் அமைப்புகள், சேவை அமைப்புகள் ஆகியவற்றுடன் கைகோத்து, 'இந்தியா ஒன்றே; அது இந்தியர்களுக்கே' என உணர்த்த வேண்டும். இதைச் செய்தால் மஹாராஷ்டிர மக்களின் சிந்தனையை, சரியான திசைநோக்கித் தூண்ட முடியும். இதர மாநில மக்களுக்கும் பாதுகாப்பு உணர்வு ஏற்படும்.

பதினான்கு முதல் பதினேழாம் நூற்றாண்டுகளில் இந்த நாட்டில் பரவிய பக்தி - சங்கீர்த்தன இயக்கம், மஹாராஷ்டிராவில்தான் முளைவிட்டது. பின்பு பஜனை சம்பிரதாயம் என்கிற அழகிய மரபாக உருவெடுத்தது. பாரதத்தை இணைத்துக் கட்டியது. இந்த மரபில் அனைத்து மொழி தேங்களுக்கும் இடம் உண்டு.

முன்னோர் வளர்த்த உணர்வுபூர்வமான ஒற்றுமையை முனைந்து கலைப்பதில் ஆர்வம் காட்டும் சிவசேனையின் மூர்க்கத்துக்கு முற்றுப்புள்ளி வைக்க வேண்டும். மதிநுட்பத்தால் உருவாகி, ஒருமைப்பாட்டு உணர்வால் கட்டுண்ட ஓர் இயக்கம் மீண்டும் வளர்ந்து பரவ வேண்டும்.

இந்த ஒரு விஷயத்தில் அரசியலையும் மதம் - மொழிகளையும் கடந்த ஓர் இயக்கத்தை கட்கரியும் ராகுல் காந்தியும் இணைந்து உருவாக்கினால், இந்தியா அவர்களை என்றென்றும் வாழ்த்தும். ◯

# ஆமாம்; ஆனால் இல்லை!

**முகலாயர்கள் - முகில், கிழக்கு பதிப்பகம், 33/15, எல்டாம்ஸ் சாலை, ஆழ்வார்ப் பேட்டை, சென்னை - 18. விலை ரூ.250/-**

இந்தியாவில் முகலாயர் ஆட்சிக் காலத்தைத் தொடங்கி வைத்தவர் பாபர். அவரைத் தொடர்ந்து ஹுமாயூன், அக்பர், ஜஹாங்கிர்... - பள்ளிக்கூட வரலாற்றுப் புத்தகத்தில் படித்ததுதானே என்கிறீர்களா?

உடல்நலமில்லாத ஹுமாயூன் நினைவிழந்து துவண்டு கிடந்தார். 'என் உயிரைக் கொடுத்து என் மகன் உயிரை மீட்கப் போகிறேன். அவனது உயிருக்கு முன் எதுவுமே மதிப்பில்லை' என்றார் பாபர். மகனது படுக்கையைச் சுற்றி மூன்றுமுறை வலம் வந்து, 'இறைவா, என் மகனது வியாதிகளை எனக்குக் கொடுத்து விடு' என்று வேண்டினார். அடுத்தடுத்த நாட்களில் பாபர் படுத்த படுக்கையானார். ஹுமாயூன் தேற ஆரம்பித்தார்.

இந்தச் சம்பவத்தை எந்த வரலாற்றுப் பாடப் புத்தகமாவது சொல்லியிருக்கிறதா? இந்தியாவில் முகலாயர் வரலாற்றைச் சுவையாக வழங்கியுள்ளார் ஆசிரியர்.

**உனக்குள் இருக்கும் வைரத்தைக் கண்டுபிடி - அரிந்தம் சவுத்ரி, ஐ.ஐ.பி.எம் பிரஸ், 48, கம்யூனிட்டி சென்டர், நாராய்ணா விகார் இண்டஸ்ட்ரியல் ஏரியா, பேஸ் - 1, புதுடெல்லி - 110 028. விலை ரூ.95/-**

'உங்களால் முடியும்' என்று நம்பிக்கையூட்டி வழிகாட்டும் நூல்கள் எக்கச்சக்கம் உள்ளனவே... இதுவும் அப்படித்தானா என்றால், 'ஆமாம். ஆனால் இல்லை!'




தங்களால் முடியும் என்று நம்பாமலிருப்பது அல்ல; தங்களால் முடியும் என்று அறிந்தபோதும் அதைச் செய்யாமலிருப்பதுதான் மோசமானது என்கிறது இந்நூல். அப்ரோச் கொஞ்சம் வித்தியாசமாகவும், விறுவிறுப்பாகவும் உள்ளதால் ஒரே மூச்சில் படிக்க உத்தரவாதம்.






**துருக்கித் தொப்பி - கீரனூர் ஜாகிர் ராஜா, அகல், 342, டி.டி.கே. சாலை, ராயப் பேட்டை, சென்னை-14. விலை ரூ.125/-**

இஸ்லாமிய சமூகத்தைப் பற்றி அதன் மரபுகளோடும், சொல்லாடல்களோடும், பழக்க வழக்கங்களோடும் பின்னப்பட்ட நாவல். அழுத்தமான கதாபாத்திரங்கள், நுண்ணுணர்வுகளைப் பதிவுசெய்யும் மொழிநடை - ஆற்றோட்டத்தில் விழுந்த பூனைப் போல நாவலுக்குள் இழுத்துச் செல்கின்றன. இது இந்திய வாழ்க்கை, தமிழ் வாழ்க்கை, மனித வாழ்க்கை என்கிறார், அணிந்துரை தந்துள்ள நாஞ்சில் நாடன். வாழ்க்கையின் பல்வேறு தரிசனங்களுள் ஒன்றைக் காண விழைவோருக்கான நாவல்.

**- நேயமுகில்**

**இ**சை மேதை, பாரம்பரிய ஓவியக் கலையின் நிகரற்ற பிரதிநிதி எஸ்.ராஜம், தமது 91ஆவது வயதில், கடந்த ஜனவரி 29 அன்று காலமானார். வருடம் தவறாமல் கல்கி தீபாவளி மலர்களுக்குத் தமது அஜந்தா பாணி ஓவியங்களை வரைந்து தருவார் ராஜம் ஸார். பெரும்பாலும் இசையுடன் தொடர்புடைய கட்டுரைக்கான சித்திரமடலாக அவை அமையும். கட்டுரையை எடுத்துப் போய் நீட்டினால், "ஒரு மாதம் அவகாசம் வேண்டும்" என்பார். ஒப்புக்கொள்வோம். சரியாக 29வதுநாள் அவரிடமிருந்து அஞ்சல் அட்டையில் தகவல் வரும். சித்திரப் பொலிவுள்ள கையெழுத்தில், ஓவியங்கள் தயார் என்று தெரிவித்திருப்பார்! மீண்டும் அவர் இல்லம் சென்றால், கட்டுரையில் அழகாக அடிக்கோடிட்டு, வர்ணனை, பாத்திரப்பதிவுக்கு ஏற்ப தாம் வரைந்துள்ளவற்றை விளக்கிச் சொல்வார். உழைப்பும், நேர்த்தியும், கவனமும், நுண்ணறிவுமே கோடுகள், வண்ணங்கள், வளைவுகளாக மாறி அந்த ஓவியங்களிலிருந்து நம்மை நோக்கிப் பாடும்! கண் பனிக்கச் செய்யும்! கலையுலகில் அழகும் அர்த்தமும் ததும்பும் ஒரு சகாப்தம் முடிந்தது என்றே ராஜம் ஸாரின் மறைவைக் குறிப்பிட வேண்டும். முன்னணி வகிக்கும் பல சிஷ்யர்களை உருவாக்கிய ராஜம், தமது சராசரி மாணவர்களுக்கும்கூட அதே சளைக்காத ஆவலுடன்தான் அள்ளித் தந்திருக்கிறார். அத்தகைய ஒரு சராசரி சிஷ்யையின் நினைவாஞ்சலி மூலம் **கல்கி**யும் எஸ்.ராஜம் ஸாருக்கு மரியாதை செலுத்துகிறது.

(ஆசிரியர்)



* ஓவியர். எஸ்.ராஜம்

கலையுலகில் அழகும் அர்த்தமும் ததும்பும் ஒரு சகாப்தம் முடிந்தது என்றே ராஜம் ஸாரின் மறைவைக் குறிப்பிட வேண்டும்.

# பாரும்



‘‘**கொ**ண்டாடறதுக்கு என்ன இருக்கு?’’ ராஜம் ஸார் தமது வழக்கமான பாணியில் வெளிப்படையாகக் கேட்டார். அவரது எண்பதாவது பிறந்தநாளை விழாவாகக் கொண்டாட நான் அனுமதி வேண்டி நின்

றேன். அவர் மறுத்தது விரக்தியின் காரணமாக அல்ல...! ''பிறந்தநாள் என்கிறது கொண்டாட்டத்துக்கான நேரமில்லைம்மா... நாம் இத்தனை காலமா வாழ்க்கையில என்ன செய்தோம்ன்றதை எடைபோட்டுப் பார்த்து, புது இலட்சியங்களை நிர்ணயிச்சுக்கறதுக்கான தருணம்...''- விளக்கம் தந்தார்.

அவருடைய எண்பதாண்டு சாதனையைக் கொண்டாட என்பது காரணங்களையாவது என்னால் அடுக்கியிருக்க முடியும் என்றாலும் அவர் உணர்வுகளை மதித்து, பேசாமல் இருந்துவிட்டேன். பத்து வருடங்கள் சென்று அவரது தொண்ணூறாவது பிறந்தநாள் கொண்டாட்டங்களைப் பிற சிஷ்யர்கள் ஏற்பாடு செய்துவிட்டார்கள்! 'இப்போ மட்டும் எப்படி...?' என்னால் கேட்காமல் இருக்க முடியவில்லை. ''எல்லாரும் ரொம்ப ஆசைப்படறதால வீட்டோட இருக்கட்டும்னு ஒப்புக்கொண்டேன்'' என்றார் சிரித்துக்கொண்டே!

தமது வாழ்வின் இறுதிக்கட்டம் என்பதை உணர்ந்து, ராஜம் ஸாரின் லட்சியம் அன்புக்கு வளைந்து கொடுத்தது! உயர்ந்த பாடகர், பல இசைக் கருவிகள் வாசிக்கத் தெரியும், அவரைப் போல் ஓவியம் தீட்ட இன்று வேறொருவர் இல்லை என்பது மட்டுமல்ல... ராஜம் ஸார் தம் உடைகளை, தமது உபயோகத்துக்கான துணிப்பைகளைத் தாமே தைத்துக் கொள்வார்; பிரமாதமாக சமையல் செய்வார். பிட்ஸா பேஸ் (ரொட்டி), டோனட் (ஒரு வகை மேற்கத்திய இனிப்பு பதார்த்தம்) செய்வதற்கான குறிப்புகளை அமெரிக்கப் பயணத்தின்போது சேகரித்து வந்து, எனக்கும் கொடுத்து உதவினார்!

# சித்திரங்கள்!



சுமார் இருபதாண்டுகளுக்கு முன், மயிலாப்பூர் நடுத்தெருவில் அவர் (இறுதிவரை) வசித்த வீட்டின் குறுகலான மாடிப்படிகளை ஏறிச் சென்றபோது நான் கண்ட காட்சி இன்னும் மறக்கவில்லை! இயற்கை வெளிச்சம் பரவிக் கிடந்த ஒரு பெரிய மையக் கூடத்தின் நடுவே பிரம்மாண்ட உணவு மேஜை. அதில் ஊறுகாய் ஜாடிகள், எண்ணெய், சமையல் பாத்திரங்கள். இன்னொரு பக்கம் காகிதங்கள், புத்தகங்கள்,

சித்ரா மாலோலன்

இசை நூல்கள். ஆங்காங்கே அவர் கை வண்ணத்து ஓவியங்கள்... தட்டுமுட்டுச் சாமான்கள் என்று பழைமையும் பிடிவாதமும் மிக்கதொரு சுவாரஸ்ய களத்தில் நுழைவது புரிந்தது. ஓர் ஓரத்தில் தூரிகைகள், வண்ணங்கள், பாதி வரையப்பட்ட ஓவியங்களுடன் ராஜம் ஸாரின் சிருஷ்டி மேஜை.

தமக்கே உரிய, விடை அடங்கிய ஒரு வினா பார்வையுடன் நிமிர்ந்து நோக்கினார். அவரிடம் இசை பயில வேண்டும் என்ற எனது ஆசையைத் தெரிவிக்கவும், உடனே வகுப்பு ஆரம்பித்துவிட்டார்!

இரண்டொரு வகுப்புகள் முடிந்த பின், ராஜம் ஸாருக்கு நான் மிக அதிகமான சிரமம் கொடுப்பதாகத் தோன்றிவிட்டது. வகுப்புகளைத் தொடர விருப்பமில்லை என்று சொன்னேன். அவருக்குத் தூக்கி வாரிப்போட்டது! ''உன் சக்திக்கு



"எதையும் இவ்வளவு சுலபமா கைவிட்டுடக்கூடாதும்மா...

என்ன வரதோ கத்துக்கோ, சந்தோஷத்துக்காகப் பாடு, போதும்'' என்றார். ''எதையும் இவ்வளவு சுலபமா கைவிட்டுடக் கூடாதும்மா... கைவிடவே கூடாது...!'' என்றார் அழுத்தமாக.

அதுதான் ராஜம் ஸாரின் தனி அடையாளம். சுற்றிவர என்ன நடந்தாலும் தம்மைப் பாதிக்கவிடாமல் தம் பணியைத் தொடர்வார்; திட்டமிட்டபடி முடிப்பார். வாழ்க்கையில் அவர் சந்திக்காத சவால்களே இல்லை என்றுகூடச் சொல்லலாம். ஆனால் எதுவொன்றும் அவரைத் தளர்ச்சியடையச் செய்ததில்லை; தமது இலக்கிலிருந்து அவரை நகர்த்தியதில்லை.

**ரா**ஜம் ஸாருடனான இசை வகுப்புகள் அலாதி அனுபவம். பெரிய பெரிய வித்வான்கள் அவரிடம் தீக்ஷிதர் கீர்த்தனையோ கோடீஸ்வர அய்யர் கீர்த்தனையோ கற்றுக்கொள்ள வருவார்கள். சூட்சுமம் அறிந்த வித்வான்களுக்கு எவ்வளவு சுலபமாக, இன்முகத்தோடு கற்றுத் தருவாரோ, அதே இனிய-எளிய அணுகுமுறையுடன்தான் என் போன்ற சராசரிக்கும் சொல்லித் தருவார்!

சில சமயம் மின் வெட்டினால் இருள் சூழ்ந்து போகும். ''ஜாக்கிரதை, நீ சரியாப் பாடலைன்னா, எங்க அப்பா காலத்துல இந்த வீட்டுக்கு வந்து பாடின மகா வித்வான்களோட ஆவியெல்லாம் உன்னைப் பிடிச்சுக்கும்!'' என்று கிண்டல் செய்வார்! நாயினா பிள்ளை அல்லது கொன்னக்கோல் பக்கிரியின் ஆவி எனக்குப் பின்னால் இருக்கிறதா என்று திரும்பி ஒருமுறை பார்த்துக் கொள்வேன்!

தமக்குப் போர்த்தப்பட்ட சால்வைகளை ஓர் அலமாரி நிறைய அடுக்கி வைத்திருப்பார். ''உங்க சல்வார் கமீஸுக்கு துப்பட்டா வேண்டுமானா இதிலேருந்து எடுத்துக்கலாம்'' என்று சிஷ்யைகளிடம் பரிந்துரைப்பார்!

ராஜம் ஸாரிடம் பயின்று கொண்டிருந்த காலகட்டத்தில் எனக்குத் திருமணம் ஆயிற்று. அப்போது அமெரிக்காவில் இருந்த எனது கணவர் இன்னும் மாணவர்; வேலைக்குப் போக ஆரம்பிக்கவில்லை என்பதால் என்னிடமிருந்து வகுப்புக்கான கட்டணத்தைப் பெற்றுக்கொள்ள மறுத்துவிட்டார் ஸார்! இத்தனைக்கும் அவர் வாங்கிய இருநூறு ரூபாய் கட்டணத்தைத் தர இயலாத நிலையில் என் கணவரோ, பிறந்தகமோ இல்லை. பணத்தின் மீது அவர் வைத்த மதிப்பு அவ்வளவுதான்! மனிதர்களின் நேசர் அவர். உறவுகளையே பொக்கிஷமாகக் கருதினார். பழைமையில் ஊறிய கலைஞர் என்றபோதும் தொழில் நுட்ப முன்னேற்றங்களைப் புரிந்துகொண்டு ஏற்றார். 1996ல் பல இளம் கலைஞர்கள்கூட மறுத்து, தயங்கிய கட்டத்தில், ராஜம் ஸார் ஓர் இணையதளத்துக்குப் பேட்டி அளித்தார்.

ஸ்ருதி இதழுக்குக் கட்டுரை எழுதினாலும் சரி, மியூசிக் அகாடமிக்கு உரை தயாரித்து வழங்கினாலும் சரி, ஓவியம் வரைந்தாலும் சரி, வகுப்புகள் எடுத்தாலும் சரி... அவருடைய அணுகுமுறையில் ஒரு முழுமையும் அர்ப்பணிப்பும் இயல்பாக அமைந்திருக்கும். இத்தனைக்கும் ஒரு தொலைபேசி இணைப்புக்கூட இன்றி வெகு எளிமையாக வாழ்ந்தவர்! ''எதுக்குமா வாழ்க்கையைச் சிக்கலாக்கிக்கணும்...?'' என்பார் அலட்டிக் கொள்ளாமல்.

**கைவிடவே கூடாது..!" என்றார் அழுத்தமாக.**



* தொன்னூறு வயதிலும்... துல்லியமான தூரிகை!

ஹவாயில் உள்ள ஓர் ஹிந்து ஆலயத்துக்குச் சித்திரங்கள் வரைந்தார். அவ்வாலயத்தினர் அவர் தம் வாழ்நாளில் வரைந்த அனேகம் ஓவியங்களையும் ஒன்று திரட்டி வாங்கினர். அவை ஒரு காலப் பெட்டகத்துக்குள் பொதியப்பட்டு, ஹவாய் தீவுகளுக்கருகே கடலுக்கடியில், காலத்தை வென்று, பாதுகாப்பாக உறங்குகின்றன!

ராஜம் ஸார் இனி இல்லை என்பதை ஏற்பது ரொம்ப கஷ்டமாக இருக்கிறது... ஆனால் அவருடைய கோட்பாடுகள் எக்காலத்துக்குமானவை - அவர் பணிகளைப் போலவே!

''ஸார்! உங்களைப் போற்றிக் கொண்டாட இந்தக் காரணங்கள் போதாதா?''- வாய்விட்டுக் கேட்கத் தோன்றுகிறது!






● சாயம் முக்கி...



● ...அச்சு ஏற்றி...

'பருத்தியே புடைவையாய்க் காய்ச்ச மாதிரி'ன்னு பட்டிதொட்டி கிராமத்துப் பக்கம் பேசிக்குவாங்க. சின்னாளப்பட்டிக்கு வந்து பார்த்தீங்கன்னா, இங்கன காடு கரைகள், தோட்டம் துரவுகள்ல கலர் கலரா புடைவைங்க காய்ஞ்சிட்டு இருக்கறதை கண் நிறைய பார்க்க அவ்ளோ நல்லா இருக்கு.

சின்னாளப்பட்டி சுங்குடிப் புடைவைக்கு, கை வேலைப்பாடு, மனித சக்தி ரெண்டும்தான் முழுமையாகப் பயன்படுது. இயந்திரப் பயன்பாடு பத்து சதவிகிதம் கூடக் கிடையாது. சோமனூரிலிருந்து லாரிகள் மூலமா துணிகள் வந்து இறங்குது. மொதல்ல சாயம் முக்குற பிரிவு. அடுத்து அச்சு ஏத்துற பிரிவு. மூணாவதா கஞ்சி போட்டுக் காயவைக்கற பிரிவு. அடுத்தடுத்து கை மாறிப் போகுது. கஞ்சி போட்டுக் காய வைச்சு எடுத்து அயர்ன் பண்ணி அடுக்கி வெச்சுட்டா சின்னாளப்பட்டி சுங்குடிப் புடைவை ரெடி.

● டி.எல்.விஜயானந்த்



''ஒரு நாளைக்கு தோராயமா பத்தாயிரம் புடைவை இந்த ஊர்ல உருவாகும்னு ஒரு கணக்கு. சின்னாளப்பட்டி சுங்குடி புடைவைகள் விலை குறைவு. உடுத்திக்



செய்ய இந்தக் காலத்துல வயசுப் பசங்க வர்றது இல்லை. அடுத்த சந்ததிக்கு இந்த வேலை தொடருமான்னு தெரியலை. கவலையா இருக்கு.

இந்தச் சுங்குடிப் புடைவைகள் தமிழ்நாட்டுக்கு மட்டுமல்ல, கேரளா, கர்நாடகா, மகாராஷ்டிரா, ஒரிசா, மேற்கு வங்காளம் போன்ற மாநிலங்களுக்கும் அனுப்பப்படுது. வருஷத்துல தீபாவளிக்குப் பின்னாடி தொடர்ந்து மூணு மாசம் 'டல்' ஆக இருக்கும். ஒன்பது மாசம் வியாபாரம் நல்லா இருக்கும். பட்டறைகள்ல வேலையும் நெறைய இருக்கும். தொழில்



● கஞ்சி போட்டுக் காயவைத்தால் ரெடி!

# புடைவைக்கிராமம்!

கட்ட நல்லா இருக்கும். மழை பெய்ஞ்சா இந்த வேலைக்குக் கொஞ்சம் தேக்கம் வந்துடும். ரெண்டாயிரம் குடும்பங்க இந்தப் புடைவை நெய்யற வேலையை நம்பித்தான் வாழ்ந்துக்கிட்டிருக்கு. இந்த வேலைக்கு வந்தா மேல சாயம் ஆகும். அதனால இந்த வேலைகளைச்



நசிஞ்சிடாம இருக்கணும்னா, அரசு நிதியுதவி செய்யணும். இளைஞர்கள் இந்தத் தொழில்ல ஆர்வம் கொண்டு, வேலை கத்துக்கவும் தொடர்ந்து வேலை செய்யவும் முன்வரணும்!'' என்கிறார் சின்னாளப்பட்டி டிஎஸ்விவி டெக்ஸ் உரிமையாளரான டி.எல்.விஜயானந்த். ●

## வாழ்த்துப் பூக்கள்

''தமிழ்ச் சிற்றிதழ் சங்கத்தின் பொதுக் குழுவில் கலந்துகொள்ள நெய்வேலி சென்றிருந்த காலை, பேருந்திலிருந்து இறங்கியதும், வரவேற்ற நெய்வேலியின் இலக்கிய நண்பர்கள் என்னிடம் மகிழ்ச்சி யுடன் இச்செய்தியைப் பகிர்ந்துகொண்டார் கள். உலக இலக்கியப் பரிச்சயத்துடன் தமிழ் மரபும் அறிந்து, போலித்தனமற்ற, அங்கதச் சுவையுடன் அவர் தந்திருக்கும் படைப்புகள் நினைவோடின. முதலில் கல்கி யில் 'வேஷங்கள்' தொடரை வாசித்த போதுதான், நான் 'இ.பா'வால் ஈர்க்கப்பட் டேன். அதன்பின் அவரைத் தேடித் தேடி வாசித்தேன். தினமணி கதிரில் தொடங்கப் பட்டு, 'இப்படிக்கூட எழுதுவார்களோ?' என்கிற கண்டனக் குரல்கள் எழ, வேறு வழியின்றி பாதியில் நிறுத்தப்பட்ட, 'திரை களுக்கு அப்பால்' நினைவுக்கு வந்தது. கணையாழியில் அவரின் 'சுதந்திரத் தாக' மும், 'வேர்ப் பற்று' முதல் பாகமும் வாசித்த பிரமிப்பு தீரு முன், அதே 'இ.பா'வுடன் ஒன்றாக அமர்ந்து, பேசி, கணையாழி அலுவலகத்தில் பணியாற்றியதும், 'யுக மாயினி' இதழ் தொடங்கப் போவதாக அவருடன் பகிர்ந்து கொண்டதும், எந்த விதத் தயக்கமுமின்றி என்னை உற்சாகப் படுத்தி, அவர் பத்தி எழுதியதோடு, பின்னர், 'வேர்ப்பற்று' இரண்டாம் பாகம் தொடங்கியதும், எல்லாம்.... எல்லாம்.... நல்வாய்ப்புதான்.'' - ஆனந்தக் கூத்தாடு கிறார் 'யுகமாயினி' சித்தன். எதற்கு? மூத்த எழுத்தாளர் இந்திரா பார்த்தசாரதிக்கு 'பத்ம ஸ்ரீ' விருது கிடைத்ததற்காக...

பசியும், பயணக் களைப்பும் பறந் தோடிட, உடனே இ.பாவுடன் தொடர்பு கொண்டேன். வாழ்த்துகளைத் தெரிவித்து, பின் சென்னையில் சந்திப்பதாகக் கூறி, அதேபோன்று சென்னை வந்ததும், அவரது இல்லத்தில் சந்தித்தேன். அப்போதுதான் நடிகர், ஓவியர், சொற்பொழிவாளர் சிவ குமார் வந்து சென்றிருந்ததன் அடையாளமாக அவர் தந்து சென்றிருந்த புத்தகங்கள் மேசையில் இருந்தன.

# ''...ஹூ த ரைட் பெர்ஸன்?''

என் மகிழ்ச்சியைப் பகிர்ந்து கொண்டு, 'கணையாழி கஸ்தூரிரங்கன்' அவர்கள் பெயரால் நாங்கள் திட்டமிடும் இலக்கிய விருதினைக் குறித்துச் சற்று நேரம் பேசியபின், பத்ம விருதினைக் குறித்து மெதுவாக விசாரித்தேன்.

''முதலில் ஆச்சரியப்பட் டேன்'' என்றார். டெல்லி அரசின் பிரதிநிதி தொலை பேசியில் வாழ்த்து

களுடன் இவ்வருடத்திய இலக்கியத்துக்கான பத்ம விருது 'இ.பா'வுக்கு அளிக்க இருப்பதைத் தெரிவிக்க, இவர் கேட்டாராம்: ''ஆர் யு டாக்கிங் டு த ரைட் பெர்ஸன்?''

முதலில் ஆச்சரியப் பட்டாலும், பின்னர் மகிழ்ச்சியளித்ததாகவும், தமிழ் எழுத்தாளன், தமிழ் ஆசிரியன் ஒருவனுக்கு, (ஜெயகாந்தனுக்குப் பின்னர்) இந்த அங்கீகாரம் கிட்டியதில் நிறைவு என்றும் அவர் தெரிவித்தார்.

**பத்மஸ்ரீ விருது தமக்குக் கிடைத்தது குறித்து, "முதலில் ஆச்சரியப்பட்டேன்" என்றார்**



ஆனால், ''1999ல், பத்ம ஸ்ரீ விருதினை விடவும் உயர்ந்த இலக்கிய விருதான, 'சரஸ்வதி சம்மான்' கிடைத்த போதுகூட இத்தனை தொலைபேசி வாழ்த்துகள் வந்ததில்லை; இது ஒரு அரசு சார்ந்த விருதாக இருப்பதினால், பரவலாகப் பலரும் செய்தி அறிந்து வாழ்த்தினர்'' என்றும் அவர் சொன்னார்.

ஒரு தீவிர சிந்தனாவாதியாகவும், ஓயாத படைப்பாளியாகவும் இந்த வயதிலும் இயங்கிக் கொண்டிருக்கும் 'இ.பா'வுக்கு இன்னமும் பற்பல விருதுகள் கிட்டிட வேண்டும். ○

**சித்தன்**

# ஹிஸ்ஹைனஸ் ரங்க

டாக்டர்கள் வெளியே சென்றதும் ரங்கராஜன் படுக்கையிலிருந்து எழுந்தான். முதலில் தான் அணிந்திருந்த உடைகளைக் கவனித்தான். அவை தன்னுடையவை அல்ல என்பது நிச்சயம். பிறகு அறையைச் சோதித்தான். அந்த அறையை அதற்கு முன் அவன் பார்த்ததில்லை. அதிலிருந்த சாமான்களும் அப்படியே. பெட்டிகளைத் திறந்து சோதிக்கலானான். அவற்றில் சாதாரண உடுப்புக்களுடன் சரிகைப் பூ வேலைகள் செய்த வெல்வெட் சட்டைகள், குல்லாக்கள் முதலியவை காணப்பட்டன. சாராயப் புட்டிகள், சிகரெட் முதலியவை இருந்தன.

அந்த அறையில் யாரோ ஓர் இளம் ஜமீந்தார் பிரயாணம் செய்திருக்க வேண்டும். டாக்டர்கள் தன்னை அந்த ஜமீன்தார் என்பதாக நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். இன்னும் கொஞ்சம் பரிசோதனை செய்த போது, 'ஹிஸ்ஹைனஸ் ரங்க துர்க்கம் ராஜா' என்று தலைப்பில் பெயர் அச்சிட்ட சில காகிதங்கள் அகப்பட்டன. மறுபடியும் புரட்டியபோது, சில புகைப்படங்கள் கிடைத்தன. அவற்றில் ஒன்றைப் பார்த்ததும் ரங்கராஜன் திடுக்கிட்டான். ஏனெனில், அப்படத்திலிருந்த உருவம் அவனைப் போலவேயிருந்தது. மூக்கு, முழி, உதடு, நெற்றி, தலைக் கிராப்பு எல்லாம் தத்ரூபம். உடையில் மட்டும் தான் வித்தியாசம் காணப்பட்டது.



வண்ணத் தூரிகை

# துர்க்கம் ராஜா!

**அமரர் கல்கி**

இன்னொரு புகைப்படம் ரங்கராஜனுடைய உள்ளத்தில் விசித்திரமான உணர்ச்சியை உண்டாக்கிற்று. அவ்வுணர்ச்சியின் இயல்பு எத்தகையதென்பது அவனுக்கே சரியாக விளங்கவில்லை. அது ஓர் இளம் கன்னிகையின் படம்.

**('ரங்க துர்க்கம் ராஜா' கதையிலிருந்து...)**



தமிழ் எம்.ஏ. படத்தில் இயல்பான அறிமுகத்தில் திடுக்கிட வைத்தவர் அஞ்சலி. ஃபோட்டோ ஜெனிக் ஃபேஸ்! அடுத்தடுத்து வந்த படங்கள் சறுக்க, சோர்ந்து போயிருந்தவர் இப்போது மகிழ்ச்சியாக இருக்கிறார்; வ. கௌதம் இயக்கி ஹீரோவாக நடிக்கும் 'மகிழ்ச்சி' படத்தின் ஹீரோயினாக செலக்ட் ஆனதால்!

*(நடிப்பு காரசாரமாக இருக்கணும்!)*



# கொலை பண்ணினா

கரண் கதாநாயகனாக நடிக்கும் 'காக்க காக்க கனகவேல் காக்க'-வில் அவ்வளவு உழைப்பாம். இருபது நாட்களில் எக்ஸர்சைஸ் செய்து காலேஜ் ஸ்டூடண்ட்டாக உடம்பைக் குறைத்தாராம். ஹீரோயின் காதலைப் பெறணும்னா சும்மாவா...

*(கஷ்ட காலம்ப்பா!)*

'கதை' படத்தில் நடித்த அமெரிக்கா வாழ் தமிழர் ஷான் நடிக்கும் அடுத்த படம் கொலைத் தொழில். டைட்டில்தான் கொலைத்தொழில் அடிப்படையில் அன்பை வலியுறுத்தும் படமாம். ஷான், அமெரிக்காவின் யேல் பல்கலைக் கழகத்தில் கம்ப்யூட்டர் துறையின் ஆராய்ச்சியாளர்.

(இப்போ காதல் ஆராய்ச்சியாளர்.)

# கொன்னுடுவேன்!



தஞ்சாவூர் மாவட்டத்தின் திட்டக்குடி கிராமத்தைத் திரையில் கொண்டு வரும் முயற்சிதான் 'திட்டக்குடி' படம். ''அடிதடி படங்களில் எனக்கு நம்பிக்கையில்லை. கதையை நம்பித்தான் என் படம்'' என்று சொல்லும் டைரக்டரும் திட்டக்குடிக்காரர்தான். விவசாயம், வீரம், காதல் கலந்த காம்பினேஷன். ஹீரோவும், ஹீரோயினும் கூட திட்டக்குடிக்காரர்களாம்.

(ஒரு குரூப்பாத்தான் கிளம்பியிருக்காங்க!)

டாக்டர் பி.ஆனந்தன்

**அன்றாடம் பெரும்பாலான பெண்களைப் பெரும் அவதிக்குள்ளாக்கும், ஆனால், 'இதெல்லாம் ஒரு மனநலப் பிரச்னையா...?' என விழிப்புணர்வு இல்லாமல் இருக்கும் நோய்கள் குறித்த சிறு சிறு விவரங்கள்...**

# பெண்கள்தான்

**மனம்சார்ந்த உடல் நோய்கள்:**

35 வயது மீனா. கணவன் தீவிரமான குடிநோயாளி. மீனா காலையில் இருந்து தையல் வேலை செய்து சேர்க்கும் சில நூறு ரூபாய்களையும் குடிக்கப் பிடுங்கிக் கொண்டு போய்விடுவான். குடித்துவிட்டு வந்தால் என்ன பேசுவான் என்று தெரியாது. மீனாவையும் அவளுடைய அப்பா, அண்ணன்களை செக்ஸ் ரீதியாகத் தொடர்பு படுத்திப் பேசுவான். தற்கொலை முயற்சி, கட்டப் பஞ்சாயத்து, மகளிர் காவல் நிலையம்... என ஐந்து வருடங்கள் அலைந்தது தான் மிச்சம்.

வருடங்கள்தான் ஓடினவே தவிர, கணவனின் நடவடிக்கைகளில் எந்த மாற்றமும் இல்லை.

ஒருநாள் இரவு திடீரென மீனாவுக்கு நெஞ்சுவலி, படபடப்பு, மூச்சு விட கஷ்டம், வியர்த்துக் கொட்டி, அவசர அவசரமாக ஒரு பெரிய மருத்துவ மனையில் சேர்த்தனர். மறுநாள் முழுவதும் ஐ.சி.யூ.வில். முப்பதாயிரம் செலவு செய்து கடைசியில், 'ச்சும்மா... பேனிக் (Panic)தான்' என டிஸ்சார்ஜ் செய்கிறார் பெரிய டாக்டர்.

கடந்த ஒன்றரை வருடத்தில் இது மாதிரி பத்துக்கும் அதிகமான முறை அட்மிட் செய்தும் 'ச்சும்மா பேனிக்'தான்!

அப்புறம் கேஸ் ப்ராப்ளமா இருக்குமோ என ஐந்தாறு குடல் நிபுணர்களைப் பார்த்து, பலதரப்பட்ட ஸ்கோப்பிகளைப் போட்டுக் கடைசியில் 'ஒன்னுமில்லை. எல்லாம் நார்மல்' என்பதுதான் 'பெரிய டாக்டரின்' பதில்.

மீனாவுக்கு இருப்பதுதான் சைக்கோ-சொமாட்டிக் டிஸ்ஆர்டர் (Psycho-somatic dis-order). மனக்குமுறல்கள் உடல் உபாதைகளாக வெளிப்பட்டன. இது மீனாவுக்கே தெரியாது.

பயத்தைச் சரிசெய்தால்தானே படபடப்பும், கலக்கமும் குறையும். என்னதான் செய்தாலும் பயம் போகாவிட்டால்?!

பெரும்பாலான மருத்துவர்களுக்குத் தெரியாததாலும், மருத்துவம் நல்ல வியாபாரமாகிவிட்டதாலும் மீனா மாதிரி கஷ்டப்படும் குடும்பங்கள் ஏராளம்.

**எண்ணம் மற்றும் செயல் சுழற்சி நோய் (OCD)**

திரும்பத் திரும்ப தேவையில்லாத எதிர்மறையான எண்ண ஓட்டங்கள்.

- கூர்மையான பொருட்களைப் பார்த்தால் பயம்.
- ஆக்ஸிடென்ட் ஆயிடுமோ?
- சாமி குத்தம் ஆயிடுமோ?
- திடீர்னு பைத்தியம் புடிச்சிடுமோ?
- சாமியைத் திட்டி, அசிங்கமா நினைக்கிற மாதிரி...

என அவளை மீறி மனத்தை ஆட்டுவிக்கும் எண்ணங்கள்.

- அதேபோல,
- கேஸை ஆஃப் செய்தோமா?

5

- கையை ஒழுங்கா கழுவி னோமா?

- வைச்ச பொருள் வைச்ச இடத்தில் இருக்க வேண்டும்.

- கொஞ்சம் தூசி இருந்தாக்கூட பொறுக்க முடியல.

- எயிட்ஸ் வந்துடு மோன்னு பயம். அத னால இதுவரைக்கும் பத்துத் தடவைக்கும் மேல ஹெச்.ஐ.வி. டெஸ்ட் பண்ணிட்டேன்.

இந்தச் செயல் கழற்சிக்குக் காரணம் மூளையில் செரடோனின் (Serotonin) னும் உயிர் வேதிப் பொருள் குறைவாகச் சுரப்பது தான். அதைக் கொடுத்தால் சரியாகிவிடும்.

# ...ார்கெட்!

### ஹிஸ்டீரியா

சாமியாடி, பேய் பிடித்து ஆடும் பெண்கள் பாதிக்கப்பட்டிருப்பதுதான் ஹிஸ்டீரியா.

- திடீர் திடீர் எனக் குழந்தைத்தனமாகப் பேசும் பெண்கள்.

- தலையில் பூ முதல், பொட்டு, லிப்ஸ்டிக் வரை ஒரே வண்ணத்தில் ஜிகினா போட்டுக்கொள்ளும் பெண்கள்.

- வீட்டுக்காரர் எப்போதும் என்னையே பார்த்துக் கொண்டிருக்கவேண்டும். அவர் குடும்பத்தைப் பற்றிப் பேசக்கூடாது.

- காட்டுக் கத்தாகக் கத்தி கையில் கிடைத்ததையெல்லாம் வீசி, அழுது, புரண்டு, தூங்குற புருஷனை எழுப்பி உட்காரவைத்து சண்டை போட்டு பெரிய டிராமாவைப் பண்ணிவிட்டு, மறுநாள்



சிருக்கேனா?'

இந்த நச்சரிப்புகள்தான் அட்டென்ஷன் சீக்கிங் பிஹேவியர்ஸ். (Attention seeking behaviours) மற்றவர்களின் கவனத்தை ஈர்க்க மனம் ஆடும் ஆட்டம் இது.

**மனச்சிதைவு நோய்**

25 வயது பெண்களை பொதுவாகத் தாக்கும் மனநோய்.

சந்தேகம் முக்கியக் கோளாறாக இருக்கும்.

- வாழ்க்கைத் துணைவரின் நடத்தையில்.
- மற்றவர்கள் தன்னைப் பற்றிப் பேசுவதாக.
- தான் நினைப்பது மற்றவர்களுக்குத் தெரிந்து விடுவதாக.

**மீனாவை, ஐ.சி.யூ.வில் அட்மிட் செய்து முப்பதாயிரம் செலவும் செய்து கடைசியில் ஒன்றுமில்லை என பெரிய டாக்டர் அனுப்பிவிட்டார்**

காலையில் எதுவுமே நடக்காதது மாதிரி மூஞ்சி வைச்சுக்கிறது. ஒரு பக்கம்,

- என்னைக் கவனிக்கிறதேயில்லை.
- உங்க வீட்டு ஆளுங்கதான் உங்களுக்கு முக்கியம்.
- எம்மேல பாசமே இல்லை.

மறுபக்கம்.

- மன்னிச்சுருங்க, இனிமே அப்படி பண்ண மாட்டேன்.
- 'ஓ.கே' என எழுந்திரிச்சா, அழுத்தி உட்கார வெச்சு, 'நான் ஏன் மன்னிப்பு கேட்கணும்? நான்தான் அப்புறம் தப்பு பண்ணினவளா ஆயிடுவேன். நீங்க பண்ண தப்பு தெரியாது.'

'சரி, நான்தான் தப்பு பண்ணேன் விடு.'

'அப்ப நான் விடாமப் புடிக்க வெச்

- தங்களின் அந்தரங்க உறவுகள்கூட ஊரெல்லாம் தெரிந்து, வெளியே போகும்போது பேசுவதாக.
- சாப்பாட்டில் விஷம் கலந்து குடும்பத்தினரே கொடுப்பதாக.
- காதில் யாரோ பேசுறமாதிரி, கூப்பிடற மாதிரி குரல்கள் கேட்பதைப் போல.

இதற்கு மருந்து சிகிச்சையே நல்ல பலனைத் தரும். யோகா, மெடிடேஷன் போன்றவை இதை குணப்படுத்துவதற்குப் பதில் தீவிரமாக்கிவிடும். மனநல மருத்துவரை அணுகத் தயங்காமல், அவர் அளிக்கும் சிகிச்சையை ஏற்று நடைமுறைப்படுத்துவதே தீர்வு.

*(அடுத்த வாரம் பேசுவோம்)*

# அருள்வாக்கு



# அது அவர் காரியம்

ஒரு குணமும், ரூபமும் இல்லாத அத்விதீய நிர்குண பிரம்மத்தை மனசினால் பிடிக்க முடியாது. ஸகுணமான மூர்த்திதான் மனசுக்கு விஷயம். அதனிடம் செலுத்துவதுதான் பக்தி. இது த்வைதம்தான். இருக்கட்டுமே! அணுவுக்குள் அணுவாக இருக்கிறவர், நாம் பக்தி செலுத்துகிற மூர்த்திக்குள் மட்டும் இல்லையா என்ன? அவர் அணுவுக்குள் அணுவாயிருப்பது நமக்கு அனுபவத்தில் சித்திக்க வேண்டுமென்றால், அவரே அப்படிப் பண்ணிவிட்டுப் போகட்டும். அவர் ஸர்வ வியாபகர், நீக்கமற நிறைந்தவர் என்றால், நாம் அன்போடு பூஜிக்கிற ரூபத்திலும் இருக்கத்தானே வேண்டும்? அவரே எல்லாமும் என்று நாம் அனுபவித்துத் தெரிந்துகொள்ள வேண்டுமானால், இதை அவரே தெரிவித்துவிட்டுப் போகிறார்! தெரிவிக்கிறார், தெரிவிக்காமல் போகிறார், **அது அவர் காரியம்**. அதைப் பற்றி நமக்குக் கவலை இல்லை. நமக்கு இப்போது அவரை பக்தியோடு ஸ்மரித்துக் கொண்டிருக்கிற ஆனந்தமே போதும். இதில் உண்டாகிற நிறைவே போதும்.

அவர் வாஸ்தவத்தில் நிறைந்த நிறைவாக இருக்கட்டும். நிர்குணமாக இருக்கட்டும். அத்வைதமாகத்தான் இருக்கட்டும். அதைப் பற்றி நமக்கு என்ன வந்தது? நம்மால்தான் அதைத் தெரிந்துகொள்ள முடியவில்லையே! வாஸ்தவத்தில் அவர் எப்படியிருந்தாலும், நமக்கு த்வைதமாகத் தெரிகிற இத்தனை அழகு, இத்தனை அன்பு, இத்தனை அறிவு எல்லாமும் அவரிடமிருந்து வந்திருப்பதால், அவரை அத்தனை ஸௌந்தர்யமும், கருணையும், ஞானமும் உள்ள மூர்த்தியாக வைத்துக்கொண்டு பக்தி செலுத்துவோம். பிறகு அவரே அவருடைய வாஸ்தவ ஸ்வரூபத்தைக் காட்டிவிட்டுப் போகிறார். அவருடைய வாஸ்தவ ஸ்வரூபத்தை அவரேதான் காட்ட முடியும். நாம் செய்யக்கூடியது, நம் மனசுக்கு அந்த ஸ்வரூபம் எப்படி வந்தால் ஆனந்தமாக இருக்கிறதோ அப்படி நினைத்து பக்தி செலுத்துவதுதான்.

**- ஜகத்குரு காஞ்சி காமகோடி**
**ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி**
**சங்கராச்சார்ய சுவாமிகள்**

# எஸ்.ஆர்.கே.

**மணி** ஆறே கால் ஆகியிருந்தது. மொபைலில் ஐந்து மணிக்கே அலாரம் வைத்திருந்தான். ஆனால், அலாரம் அடிக்க வில்லை. எஸ்.ஆர்.கே, ''ஏழரைக்குள் வீட்டுக்கு வந்து விடுங்கள். ஃபைனான்ஸி யரைப் பார்த்து விடலாம். ஆபீஸில் அவரைச் சந்திப்பதைவிட வீட்டில் சந் திப்பது பல வகைகளிலும் நல்லது'' என்று சொல்லியிருந்தார். அதைச் சொல்லும் போது எஸ்.ஆர்.கே ரொம்ப உற்சாகத்தோடு காணப்பட்டார்.

அவரிடம் என்றைக்குத்தான் உற்சாகம் குறைவாக இருந்தது! எப்போதும் வொயிட் அண்ட் வொயிட்தான் போடுவார். செருப்பு கூட வெள்ளை நிறத்தில்தான் இருக்கும். உலக சினிமாவை அவரைப் போல் அலசி ஆராய யாராவது பிறந்துதான் வர வேண்டும்.

பிலிம் இன்ஸ்டிட் டியூட் நாட்களிலிருந்தே எஸ்.ஆர்.கே. ராமநாதனுக் குப் பழக்கமாகியிருந்தார். ஒரு ஜெர்மன் ஃபிலிம் ஃபெஸ்டிவலின்போது ஒட்டப்பாலம் கிருஷ்ணமூர்த்திதான் அவ னுக்கு எஸ்.ஆர்.கே.வை அறிமுகம் செய்து வைத்தான். பிறகு அலியான்ஸ் பிரான் ஸிஸ், அமெரிக்கன் சென்டர், ரஷ்யன் கல்ச்சரல் சென்டர், ஃபிலிம் சேம்பர் என்று எஸ்.ஆர்.கே.வும் அவனும் இந்த நாலு வருடங்களில் சேர்ந்து பார்த்த திரைப்படங் கள் நூற்றுக்கணக்கில் இருக்கும். அறுபத்து இரண்டில் சுமாராக ஓடிய ஒரு தமிழ்ப்படம் ஒன்றையும் எஸ்.ஆர்.கே. சொந்தமாகத் தயாரித்திருந்தார். அதன்பிறகு அவர் படமே தயாரிக்கவில்லை. ஆனால், அவருடைய விஸிட்டிங் கார்டில் மட்டும் இன்னமும் தம்முடைய கம்பெனியின் பெயரைப் போட்டிருந்தார்.

அது திருவல்லிக்கேணி முகவரி. திருவல்லிக்கேணியில் சினிமா கம்பெனி இயங்க முடியும் என்பது ராமநாதனுக்கு ஆச்சரியமாகக்கூட இருந் தது. படமே எடுக்காமல் எதற்கு கம்பெனியின் பெயரை மட்டும் இன்னமும் விஸிட்டிங் கார்டில் போட்டுக் கொண்டிருக்கிறார் என்று நினைத்தான். பிறகுதான் அது அவரது வீட்டு முகவரி என்பது தெரிந்தது.



பிரம்மச்சாரிகளின் அறை களுக்கே உரிய புழுங்கிய துணிகளின் நாற்றம் வீசியது. கதவைத் திறந்ததும் வெளியே இருந்து குளிர்ந்த காற்று வீசி யது. டியூபைப் போட்டால் ராஜு விழித்துக்கொள்வான்

◆ வண்ணநிலவன் ◆



என்று விளக்கைப் போடாமலேயே பிரஷ் செய்தான். இந்தக் குளிரில் குளிக்க வேண்டாம் என்று நினைத்தான். முகத்தை மட்டும் அலம்பிக் கொண்டான். ஆனால், தலை வாரிக் கொள்ள வெளிச்சம் தேவைப் பட்டது. மேலும், ராஜுவிடம் பணமும் கேட்க வேண்டும். வேறு வழியில்லாமல் சுவிட்சைப் போட்டான். நினைத்தபடியே விளக்கு எரிந்ததும் ராஜு விழித்துக் கொண்டான். மூடியிருந்த போர்வையை விலக்காமலேயே, ''ஏன்டா... இப்பவே விளக்கைப் போட்டுண்டு என்ன பண்றே?'' என்று கேட்டான்.

'எஸ்.ஆர்.கே.வைப்

பார்க்கப் போறேன்டா. ஒங்கிட்டே பணம் ஏதாவது இருக்கா?'' என்று தலையை வாரிக் கொண்டே கேட்டான்.

''எவ்வளவு வேணும்டா?''

''ஒரு இருபத்தைஞ்சு ரூபா குடு.''

''போதுமா... ஷர்ட் பாக்கெட்லே இருக்கும். எடுத்துக்கோ. லைட்டை அணைக்காமப் போயிராதே...'' என்று ஞாபகமாகச் சொன்னான். ராஜுவுக்குத் தூக்கம் ரொம்ப முக்கியம். சிறுசேரியில் ஒரு சாஃப்ட்வேர் கம்பெனியில் வேலை பார்க்கிறான்.

ராஜுவின் சட்டைப் பையில் நான்கு நூறு ரூபாய்த் தாள்களும், மூன்று பத்து ரூபாய்த் தாள்களும் இருந்தன. இருபத்தைந்து ரூபாயாக இல்லை. முப்பது ரூபாயை எடுத்துக்கொண்டான்.

''முப்பது ரூபா தான்டா இருக்கு...''

''சரி...சரி.. எவ்வளவு வேணுமோ எடுத்துக்கோயன்டா...''

ரயிலுக்கு ஸிஸன் இருக்கிறது. மாம்பலம் போய் அங்கிருந்து திருவல்லிக்கேணிக்கு பஸ்ஸில் போய் விடலாம். ஃபைனான்ஸியர் வீடு கீழ்ப்பாக்கத்திலிருக்கிறது. அவனை பஸ்ஸில் அழைத்துச் செல்லப் போகிறாரா ஆட்டோவில் கூட்டிக் கொண்டு போகப் போகிறாரா என்பது தெரியவில்லை. அதை எஸ்.ஆர்.கே. பார்த்துக்கொள்வார். எதற்கும் இருக்கட்டுமென்று ராஜுவிடம் நூறு ரூபாயாகவே கேட்டிருக்கலாமோ என்று தோன்றியது.




விளக்கை அணைத்து விட்டுக் கதவை வெறுமனே சார்த்தினான். இந்த நேரத்தில் பஸ் வராது. வேகமாக நடந்தால் இருபது நிமிடத்தில் ஸ்டேஷனுக்குப் போய் விடலாம். அந்தக் காலை நேரத் திலும் வாக்கிங் போகிறவர்கள் சென்று கொண்டிருந்தனர்.

இப்போது பாளையங்கோட்டையில்கூட வாக்கிங் போக ஆரம்பித்து விட்டார்கள். வாக்கிங் போவதைப் பற்றி ஒரு குறும்படம்கூட எடுக்கலாம். முதல் ஷாட்டில் ஃபிரேம் முழுவதும் நடந்து செல்லும் கால்களைக் காட்ட வேண்டும். ஊரில் அப்பா வாக்கிங் போவாரா? உலகத்தில் எல்லோருக்கும் சர்க்கரை வியாதி இருக்கிற மாதிரி அப்பாவுக்கும் சர்க்கரை வியாதி இருக்கிறது. ஆனால், அப்பா வாக்கிங் போகிற மாதிரி தெரியவில்லை. பொதுவாகவே அப்பா உலக நடைமுறைகளை அவ்வளவு எளி

தில் பின்பற்றிவிட மாட்டார்.

ஆனால், அம்மா அப்படியில்லை. வெள்ளி, செவ்வாய்க்கிழமைகளில் விரதம் இருப்பது முதல் எல்லாவற்றிலும் அம்மாவுக்கென்று சில நடைமுறைகள் உண்டு. அம்மாவுக்காக தனி பூஜை அறை வைத்து ஒரு வீடு கட்ட வேண்டும். சினிமாவில் ஜெயித்தால் ரேவதியை டாக்டருக்குக்கூடப் படிக்க வைக்கலாம். திடீரென்று ட்ருபாவுடைய 'டே ஃபார் நைட்' ஞாபகத்துக்கு வந்தது.

மோட்டார் சைக்கிள் ஒன்று வேகமாகச் சென்றது. போலீஸ் ஸ்டேஷன் வாசலில் ஒரு நாய் படுத்துக் கிடந்தது. ஃபைனான்ஸியர் கதை கேட்டால் சொல்ல வேண்டும். பிலிம் இன்ஸ்டிட்டியூட்டில் ஸ்கிரிப்ட் எழுதித்தான் பழக்கம். ட்ருபா, பெலினி எல்லாம் இப்படித்தான் ஃபைனான்ஸியரிடம் கதை சொல்லிப் படமெடுத்திருப்பார்களா? ஃபைனான்ஸியர் கோகுல்தாஸைத் திருப்தி செய்தால்தான் படமெடுக்க முடியும். கோகுல்தாஸ் எப்படியிருப்பார்? உயரமாக நெடுநெடுவென்று இருப்பார் என்று தோன்றிற்று.

நேற்று இரவு ஃபிலிம் சேம்பரில் கிரீஷ் காஸரவல்லியின் படத்தை அவனும் எஸ்.ஆர்.கே.வும் பார்த்தார்கள். ஏற்கெனவே பார்த்த படம்தான் அது. படம் முடிந்ததும் டீ குடித்தார்கள். டீ நன்றாகவே இல்லை என்றாலும், சினிமா முடிந்த பிறகு டீ குடிப்பது இருவருக்குமே பழக்கமாகியிருந்தது. பழக்கத்தின் காரணமாகச் செய்கிற எத்தனையோ காரியங்களில் அதுவும் ஒன்று. காகம் ஒன்று தலைக்கு மேலே கரைந்துகொண்டே பறந்து போனது. ஸ்டேஷன் நெருங்கிவிட்டது. ஏதோ ரயில் புறப்படுகிற சத்தம் கேட்டது.

தண்டவாளத்தைக் கடந்து ஸ்டேஷனுக்குள் நுழைகிறபோது, கிரீஷ்காஸரவல்லியிடம் மறைந்த கன்னட இலக்கிய கர்த்தா சிவராம கராந்தின் மனம் இருக்கிறதென்று தோன்றியது. ஸ்டேஷன் கேன்டீனில் டீ குடித்தான். சட்டைப் பைக்குள் மொபைல் கனத்துத் தொங்கினால் அவனுக்குப் பிடிக்காது. மொபைலைக் கிரெடிட் கார்டு அட்டை கனத்துக்குச் செய்ய முடியாதா? ரயில் வந்துவிட்டது. அவ்வளவு காலையிலேயே ஒருவர் ரயிலில் பிச்சை எடுத்துக் கொண்டிருந்தார்.

**'எஸ்.ஆர்.கே. வீடு மாடியிலா? கீழ்ப்பகுதியிலா?'**
**என்று யோசித்துக்கொண்டே தயங்கி நின்றான் ராமநாதன்.**

**மா**ம்பலத்தில் 13-ம் நம்பர் பஸ் புறப்பட வெகு நேரமாகிவிட்டது. மணி ஏழே காலாகியிருந்தது. மாம்பலத்திலிருந்து ஆட்டோவில் போனால் ஏழரைக்குள் எஸ்.ஆர்.கே. வீட்டுக்குப் போய்விடலாம். ராஜுவிடம் நூறு ரூபாயாகக் கேட்டு வாங்காதது தப்பு என்று பட்டது. ஜாம் பஜார் ஸ்டாப்பிங்கில் இறங்கி வீட்டைத் தேடினான். சிறிது நேரம் அலைந்த பிறகு தெருவைக் கண்டுபிடித்தான்.

தெரு என்று பெயர் இருந்தாலும் அது தெருவல்ல. நீளமான சந்துதான். பல

திருவல்லிக்கேணிச் சந்துகளுள் அதுவும் ஒன்று. ஒரு ஆட்டோ செல்கிற அளவுக்குத்தான் அகலமிருந்தது. இந்தத் தெருவிலா எஸ்.ஆர்.கே. குடியிருக்கிறார்? இந்த இடுக்கமான சந்திலிருந்து கொண்டா பெர்க்மானைப் பற்றியும், கோடாடர்ட்டைப் பற்றியும் மூச்சு விடாமல் பேசுகிறார்?

வீட்டு எண்ணை எண்ணிக்கொண்டே வந்தான். பதினேழு, பதினெட்டு, பத்தொன்பது இதுதான். அழிக் கம்பிக் கதவு



போட்ட வீடு இது. தெருவை ஒட்டியிருந்த வராந்தாவிலிருந்து மாடிக்குப் படிக்கட்டு போயிற்று. அந்தத் தெரு பூராவும் வீசிய சாணத்தின் நாற்றம் அங்கேயும் வீசியது.

எஸ்.ஆர்.கே. வீடு மாடியிலா கீழ்ப் பகுதியிலா என்று யோசித்துக்கொண்டே தயங்கி நின்றான். கதவினருகே இருந்த ஜன்னலில் ஒரு ஆணின் முகம் தெரிந்தது.

''யார் வேணும்?''

''எஸ்.ஆர்.கே. சார் வீடு...'' என்று இழுத்தான்.

''உள்ள வாங்க... இதுதான்'' என்று சொல்லிக்கொண்டே கைலி கட்டியிருந்த ஒரு ஆள் கதவைத் திறந்துகொண்டு வெளியே வந்தார். அவனை அழைத்துச் சென்று சதுரமாக இருந்த சிறிய அறையில் உட்கார வைத்தார். அவரும் ஒரு பழைய நாற்காலியில் உட்கார்ந்துகொண்டார். அவருக்கு முப்பது முப்பத்தைந்து வயதிருக்கலாம். அவர் அணிந்திருந்த பனியன் தோள் பக்கம் இலேசாகக் கிழிந்திருந்தது.

''அப்பா இப்போ கொஞ்சம் முன்னாடிதான் வெளியே போனார்... நீங்க யாரு?''

''என் பேர் ராமநாதன்... சார் வீட்டுக்கு வரச் சொல்லியிருந்தார்...''

''டாக்டர்! இரட்டைத் தலைவலி இப்போ பாதியா குறைஞ்சிடுச்சு.''

''அடடா... அப்போ ஒற்றைத் தலைவலி வந்துடுச்சா?''

- சி.பி.செந்தில்குமார்

''எதுக்கு வரச் சொன்னார்? இன்னைக்கு ஏதாவது காலையிலே படம் இருக்கா?''

''இல்லே... ஒரு ஃபைனான்ஷியர் கிட்டே அழைச்சுட்டுப் போறேன்னு சொல்லியிருந்தார்.''

''ஓ! அதுவா?'' என்று சொல்லிவிட்டு அவனையே பார்த்துக்கொண்டிருந்தார்.

''கோகுல்தாஸ்கிட்டே அழைச்சுட்டுப் போறேன்னு சொல்லியிருந்தாரா?''

''ஆமா...''

வீட்டினுள் ஏதோ பாத்திரம் கீழே விழுந்தது. சிறிது நேரம் அவனையே



பார்த்துக்கொண்டிருந்தார்.

''சார் தப்பா நெனைச்சுக்காதீங்க. நீங்க ரொம்ப நம்பிக்கையோட வந்திருக்கீங்க. அப்பா இப்படித்தான் அப்பப்போ சிலபேர் கிட்டே, கோகுல்தாஸ்கிட்டே அழைச்சுட்டுப் போறேன்னு சொல்லியிருக்கிறார். கோகுல்தாஸ் அப்பாவோட படத்துக்கு ஃபைனான்ஸ் பண்ணினது நாப்பது நாப்பத்தைஞ்சு வருஷத்துக்கு முன்னாடி. இப்போ அப்பாவை மாதிரி அவருக்கும் வயசாயிடுச்சு. அவரோட பையங்கதான் தொழிலைக் கவனிச்சுக்கிறாங்க. அப்பா அந்தக் காலத்திலே, தான் படம் எடுத்த ஞாபகத்திலேயே இன்னமும் இருக்கார். இன்னமும் தன்னை ஒரு புரொடியூஸரா நெனைச்சுக்கிட்டு இருக்கார். சொன்னா நம்ப மாட்டீங்க... பூஜையிலே அவரோட கம்பெனியின் பழைய க்ளாப் போர்டை வச்சு தினசரி கும்பிட்டுக்கிட்டு இருக்கார். சினிமாவைப் பத்தி அவருக்கு நெறையத் தெரியும். ஆனா இனிமே அவராலே எல்லாம் படம் பண்ண முடியுமா சொல் லுங்க...?

என் அப்பாவைப் பத்தி நானே தப்பா சொல்லக்கூடாது. இது ஒருவிதமான கம்பல்ஸிவ் அப்ஸஷன். ஒருவிதமான மன வியாதி. அவருக்கு எழுபது வயசு ஆச்சு. நாங்களும் அவரை ஒண்ணும் சொல்றதில்லை'' என்றார்.

ராமநாதனுக்கு என்ன பேசுவதென்றே புரியவில்லை. தலையைத் தொங்கப் போட்டுக்கொண்டு உட்கார்ந்திருந்தான். தெருவில் ஒரு பெண் கோல மாவு விற்றுக் கொண்டு போனாள்.

ராமநாதனுக்கு என்ன பேசுவதென்றே புரியவில்லை. தலையைத் தொங்கப் போட்டுக்கொண்டு உட்கார்ந்திருந்தான்

''காபி எதுனா சாப்பிடறீங்களா?'' என்று கேட்டார்.

''இல்லை. வேண்டாம்...''

''பாவம், இவ்வளவு தொலைவு தேடி வந்திருக்கீங்க.''

''நான் வர்றேன்'' என்று ராமநாதன் எழுந்து நின்றான்.

''இங்கேதான் பக்கத்திலே எங்கேயாவது போயிருப்பார். உக்காருங்க. வந்திருவார்.''

''இல்லே... நான் கிளம்பறேன். அப்புறமா நான் அவர்கிட்டே பேசிக்கிறேன்'' என்று சொல்லிவிட்டு வேகமாக வெளியே வந்தான். ◉

கவிஞர் யவனிகா ஸ்ரீராம் - நவீன கவிதைத் தளத்தில் தீவிரமாக இயங்கி வருபவர். 'சொற்கள் உறங்கும் நூலகம் உட்பட நான்கு கவிதைத் தொகுப்புகளைத் தந்திருக்கிறார். திண்டுக்கல் மாவட்டம் சின்னாளப்பட்டிக்காரர். அவருடனான உரையாடல்...

**உங்களுக்கு கவிதை என்னவாக இருக்கிறது?**

''என்னுடைய இருப்பை அடையாளப்படுத்தும் நிகழ்வுதான் கவிதை. ஆனால், ஒருபோதும் கவிதைகளை, கவிஞர்களைச் சமூகம் புரிந்துகொள்ள முற்பட்டதில்லை; மாறாகப் புறக்கணிக்கிறது. பெரியார்கூட கவிஞர்களை நரம்பில் புகுந்துவிட்ட நோய்கள் என்றுதான் குறிப்பிட்டார். அளவுக்கு அதிகமான அழுத்தங்களை சமூகம் கவிஞன் மீது திணிக்கிறது. எனினும் அவன் அத்தனையையும் புறக்கணித்துவிட்டு முன்னேறுகிறான்.''

**கவிஞர் யவனிகா ஸ்ரீராம்**

**இன்றைக்கு கவிதைக்கான சூழல் ஆரோக்கியமாக இருக்கிறதா?**

''இது மீடியாவின் காலம். எந்தக் காலத்திலும் இல்லாத அளவுக்கு மனிதன் விஞ்ஞானத்தின் உச்சாணியில் வீற்றிருக்கிறான். அது எதையும் காட்சியோடு அவன் வீட்டுக்கே கொண்டு வந்து சேர்த்து விடுகிறது. அதனால்தான் என் கவிதைகளில் காட்சிப்படுத்துதல் அதிகமாக இருக்குமாறு பார்த்துக் கொள்கிறேன். வேறெப்போதும் இல்லாத அளவுக்கு இப்போது மீடியாவால் கவிதைக்குத் தோன்றியிருக்கும் நெருக்கடி மிக அதிகம்.''

**கவிதை, மக்களுக்கு எந்த அளவுக்குத் தேவை?**

''மனிதர்கள்

# "கவிஞனை சமூகப்

மரபுகளையும், தொன்மங்களையும் எந்த அளவுக்கு முக்கியப்படுத்துகிறார்களோ அந்த அளவுக்குக் கவிதையும் தேவை. கவிஞனுக்கு கவிதை எழுதுவதோடு வேலை முடிந்து விட்டது. அதைக் கொண்டு சேர்க்கும் பணி அரசாங்கத்துக்குரியது. நல்ல கவிதைகளை அடையாளம் கண்டு வெகுஜன வாசிப்புக்குக் கொண்டு வர வேண்டும். திருக்குறளின் விஷயத்தில் இதுதான் நடந்தது. திருமணம் நடக்கிறதோ இல்லையோ, ஏதேனும் ஒரு வகையிலாவது திருக்குறள் திருமணத்தில் இணையாமல் இல்லை என்றாகிவிட்டதல்லவா?!''

**படிமம், குறியீடு, புனைவு ஆகியவற்றில் காட்டுகிற அக்கறையை நவீன இலக்கியம் மக்கள் பிரச்னையிலும் காட்டுகிறதா?**

''பிரச்னை இருக்கிற இடத்தில் இலக்கியத்துக்கு வேலை கம்மி. பிரச்னை முடிந்த பிறகுதான் இலக்கியம் தன் வேலையைச் செய்ய ஆரம்பிக்கிறது. பிரச்னையைத் தன் படைப்பினூடே பதிவு செய்கிறது. இலக்கியம் என்றைக்கும் தீர்வு சொல்லாது. தீர்வை நோக்கி இயங்கச் சொல்லும். இங்கே பிரச்னை, பசி, வேலையின்மை போன்றவை மட்டும் மக்கள் பிரச்னைகள் இல்லை. அழகியல் தட்டுப்பாடுகூட பிரச்னை. மேலும் இங்கே ஒரு கவிதை இருக்கிறது என்பதைவிட ஒரு




கவிஞன் இருக்கிறான் என்பதே எனக்குப் பெரிய விஷயம்தான்.''

**ஒரு எழுத்தாளரின் புத்தகத்தை இன்னொரு எழுத்தாளர் 'இது குப்பை' என்று கிழித்தாரே?**

''நீங்கள் சொல்லும், சாருநிவேதிதாவுக்கும் - ஜெயமோகனுக்கும் இன்று நேற்று சண்டை இல்லை. 1998ல் கலாப்ரியாவின் குற்றாலப் பதிவிலிருந்தே ஆரம்பமாகிவிட்டது. நீங்கள் சொன்ன சம்பவம் ஒரு ஸ்டண்ட் அவ்வளவுதான். அந்தக் குறிப்பிட்ட புத்தகம் விற்பதற்காக எழுத்தாளர்களும், பதிப்பாளர்களும் இணைந்து அரங்கேற்றிய கேவலமான நாடகம். இதை மீடியா பெருசு பண்ணாமல் விட்டது மிகுந்த ஆரோக்கியமானது.''

**ஒரே எழுத்தாளர், ஒரே நேரத்தில் பத்து புத்தகங்கள் போடுகிறாரே?**

''அச்சு இயந்திரத்தின் பசிக்கு எழுத்தாளர்களைக் காவு கொடுக்கும் வேலை இது. இந்தச் செயல்பாட்டில் பெரும்பாலான எழுத்தாளர்கள் சிக்காமல் இருப்பது நல்ல விஷயம். மற்றபடி இது குறித்துச் சொல்ல வேறொன்றுமில்லை!'' - என்று சொல்லும் யவனிகா ஸ்ரீராம், ''என் கவிதைகள் அழுகிக் கொண்டிருக்கும் மாமிசத்துக்கு ஒப்பானது'' என்று சுயவிமர்சனமும் செய்துகொள்கிறார். ●

# றக்கணிக்கிறது!''

''லவ்வுங்கிறது''ன்னு ஆரம்பிச்சு கோடம்பாக்கம் தரும் ஏடாகூட பிலாசஃபி எக்கச்சக்கம்! ''உங்க பிலாசஃபி என்ன?'' என்றோம் சிபிராஜிடம். ''லவ் ஃபீலிங் வேற எந்த உறவுகளுடனான உணர்வுகளோடும் கம்ப்பேர் செய்ய முடியாதது'' என்று கேஷுவலாக லவ்வுக்கு விளக்கம் கொடுக்கிறார் சிபிராஜ்.

● மலரும் நினைவுகள் மீண்டும் மலருமா?

''நானும் என்னோட வொய்ஃப் ரேவதியும் உட்லண்ட்ஸ் டிரைவ்-இன் ஹோட்டலில்தான் முதன் முதலில் சந்திச்சோம். பார்த்தவுடனேயே காதல்னு சொல்ல முடியாது. பழகிப் பழகித்தான் வொர்க் அவுட் ஆச்சு. சரியான சந்தர்ப்பத்துல எங்களோட காதலை வெளிப்படுத்தி, பெற்றோர்களோட சம்மதம் பெற்று கல்யாணம் பண்ணிக்கிட்டோம். எங்களோட சந்திப்புகளுக்கு ரொம்ப ஹெல்ப் செய்த உட்லண்ட்ஸ் ஹோட்டல் இப்ப இல்லாததை நினைச்சா வருத்தமா இருக்கு.''

● காதல் குறித்த புரிதல் இருக்கா இளசுகளிடம்?

''நல்லா டிரெஸ் பண்றது, படிப்பு, கைநிறைய சம்பளம் வாங்கறது இப்படிப் பல விஷயங்கள் பசங்ககிட்டேயிருந்து பொண்ணுங்க எதிர் பார்த்தாலும், ஓவர் பில்டப் பண்ணாம, யதார்த்தமா இருக்கிற பசங்களைத்தான் பொண்ணுங்களுக்குப் பிடிக்கும்.

ஆனா, சினிமா காதலில் ஃபேன்டஸி தவிர்க்க முடியாதது. ஒருசில படங்கள்ல யதார்த்தமான காதலைச் சொல்றாங்க. இது தொடரணும். என்னைக்குமே, எந்தச் சூழ்நிலையிலுமே நாம காதலுக்கு சின்சியரா இருந்தா காதலும் நமக்கு சின்சியரா இருக்கும்.''

● உங்களுக்குப் பிடித்த காதல் படம்?

''எனக்குப் பிடித்த யதார்த்தமான காதல் படம் குஷி. விஜய்யின் துறுதுறு நடிப்பும், கேஷுவலாக காதலை வெளிப்படுத்தும் விதமும் சூப்பராக இருக்கும். விஜய்யின் ரசிகன் நான்'' என்று காதலைப் பற்



# என் காதல் சின்னம் ட்ரைவ் - இன் உட்லேண்ட்ஸ்!



றியே பேசிக் கொண்டிருந்தவரிடம், ''ஏன் திடீர்னு வில்லனா நடிக்கக் கிளம்பிட்டீங்க?'' என்று தூண்டில் போட்டோம்.

''நெகட்டிவ் கேரக்டர் பண்ணா நடிக்க நிறைய ஸ்கோப்னு நினைச்சேன். நடிச்சேன். நாணயம் படத்தில் செய்த கேரக்டருக்கு நல்ல வரவேற்பும் கிடைச்சது. சாந்துப் பொட்டு படத்தில் ஹீரோவா பண்றேன்.''

**● உங்க படத்துல அப்பாவோட தலையீடு இருக்குமா?**

''அப்பாவோட தலையீடு அநாவசியமா இருக்காது. எனக்குச் சொல்லப்படற கதைகள் பொருந்துமான்னு தெரிஞ்சுக்க கதை கேட்பாரு. ஆனா, கதையில மாற்றம் செய்யச் சொல்லி வற்புறுத்த மாட்டார்.''

**● இருக்கிற போட்டியில உங்களை எப்படி நிலை நிறுத்திக்கப் போறீங்க?**

''எனக்கு ஸூட்டாகிற கதைகள் மட்டும்தான் தேர்ந்தெடுக்கிறேன். இதுவே பாதி வெற்றிதான். என்னோட பலம், பலவீனம் எனக்குத் தெரியும். அதனால், என் இடத்தை என்னால தக்க வைச்சுக்க முடியும்.''

**- ராகவ்குமார்**

**தினந்தோறும் பழநி மலையில், 'முருகனுக்கு அரோகரா' கோஷம் விண்ணை முட்டுகிறது. பக்தர்களின் கூட்டம் பெருகி வருகிறது. முருகப் பெருமானின் அறுபடை வீடுகளில் இது, மூன்றாவது படை வீடு எனச் சொல்லப்படுகிறது. அருள்மிகு தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில் குறித்து சில துளிகள்...**

● பழநி மலை, நானூற்றைம்பது அடி உயரம். நடந்து ஏறிச் செல்ல அறு நூற்றுத் தொண்ணூற்றேழு படிகள். முறைப்படி கோயிலுக்குச் செல்ல விரும்புபவர்கள், முதலில் அடிவாரத்தில் உள்ள பாத விநாயகர் தரிசனம் செய்து, மலையடிவார சுற்றுப் பாதையில் கிரிவலம் வந்து மலையேறிச் செல்வார்கள்.

● பழனியாண்டவனை நடந்தே மலையேறிச் சென்று தரிசித்துவிட்டு, நடந்தே கீழிறங்கலாம். இழுவை ரயிலில் ஏறிச் சென்று, அதன் வழியேயும் வந்து சேரலாம். ரோப் காரில் ஏறியமர்ந்து மலையுச்சியை அடைந்து, ரோப் கார் வாயிலாகவே கீழே வந்தடையலாம். ஒவ்வொன்றும் ஒவ்வொரு வகை அனுபவமே!

● கருவறை இறைவனின் திருவுருவம், போகர் எனும் சித்தர் உருவாக்கியது எனச் சொல்லப்படுகிறது. நவபாஷாணத் திருவுருவச் சிலையாக அருள்மிகு தண்டாயுத பாணி சுவாமி எழுந்தருளியுள்ளார்.

● கோயிலின் உட்பிராகாரத் தென்மேற்கு மூலையில் போகர் சன்னிதி உள்ளது. அந்த சன்னிதியில் போகர் பூசித்து வணங்கிய புவனேசுவரி அம்மன் திருமேனி தற்போதும் பூஜையில் இருந்து வருகிறது.

● போகர் சித்தர் குறிப்பிட்ட இடத்திலே ஜீவ சமாதி அடைந்தாரென்றும், அங்கிருந்து முருகன் திருவடி நிலைக்கு ஒரு சுரங்க வழி உண்டென்றும், கடைசியாக அதனுள் சென்ற போகர் திரும்பி வரவில்லை என்றும் சொல்லப்படுகிறது.

● பழநி மலைக்கோயில் மேற்கு திசை நோக்கியதாகும். கட்டைக் கோபுர வாசல் கடந்து சென்றால் சுப்பிரமணிய விநாயகர் சன்னிதி, நாயக்கர் மண்டபம், வைசியர் மண்டபம், பின்னர் ஐந்து நிலை மாடங்கள் பொருந்திய இராஜகோபுரம். அடுத்து இரண்டாம் பிராகாரம்.

● பன்னிரண்டு கற்றூண்கள் தாங்கிய பாரவேல் மண்டபம். இதனை ஒட்டி வாத்திய மண்டபம். இதற்கு எதிரே தட்சிணா மூர்த்திக்கும், மலைக்கொழுந்து சிவன் மற்றும் அம்மனுக்குமாக மூன்று தனி சன்னிதிகள்.

● துவார பாலகர்கள் தாங்கி நிற்கும் மகா மண்டபம். மண்டபத்தின் கற்றூண்களில் அழகிய சிற்ப வேலைப்பாடுகள். உள் நுழைந்ததும் இடதுபுறத்தில் கல் மேடை மீது நடராசர் - சிவகாமியம்மை.

● இதனையடுத்து ஆண்டவன் பள்ளியறை. சண்முகநாதர் சன்னிதி. திருவுலாப் போதர் சின்னக் குமரர் சன்னிதி. இவற்றை தரிசித்துக் கடந்தால், முருகப் பெருமான் சன்னிதி.

● மேற்கு நோக்கிய நிலையில் தண்டாயுதபாணியாக இறைவன் காட்சி அளிக்கிறான். அருள் கனிந்த பார்வை, புன்னகை தவழும் செவ்விதழ், இணையற்ற திருமுகம், அழகிய மார்பு, ஞான தண்டமேந்திய வலது திருக்கரத்து எழில், திருத்தாள்களின் பொலிவு, திருத்தண்டைகளின் தண்ணென ஈர்க்கும் அழகு - இவை யாவுமே கணப்பொழுதில் காண்போரைப் பரவசம் அடையச் செய்து விடுகின்றன.

# பரவச பழநி!




தங்கத் தேரில் உலாவரும்
தண்டாயுதபாணி

உலகெங்கும் பல்வேறு மொழிகளில் பல லட்சம் முறை சொல்லப்பட்ட மிகச் சாதாரணமான, மிக மிக எளிமையான, மிகவும் பலவீனமான காதல் கதை. என்றாலும், எரிக் சீகலின் லவ் ஸ்டோரி, வெளி வந்த தேதி முதல் இன்று வரை உலகம் முழுவதும் பரவிப் படர்ந்து விற்றுக் கொண்டிருக்கிறது.



# என்றென்றும்

என்ன புதிதாக உள்ளது இந்த நாவலில்? சங்க இலக்கியங்களில், கிரேக்க காவியங்களில், ஷேக்ஸ்பியரில், ஷெல்லியில், தாகூரில், கதைகளில், கவிதைகளில், மசாலா சினிமாக்களில் பல்வேறு விதங்களில், பல்வேறு வடிவங்களில் மீண்டும் மீண்டும் சொல்லப்பட்டு வரும் சாமானியக் கதைதான் இது எனில், ஏன் எரிக் சீகலின் நாவலுக்கு மட்டும் இத்தனை முக்கியத்துவம்?

உண்மையில், எரிக் சீகலுக்கே இந்தப் புதிர் பிடிபடவில்லை. நிருபர்களும் வாசகர்களும் அவரிடமே கேட்டுப் பார்த்திருக்கிறார்கள். ''அது ஒரு சாதாரணமான செண்டிமெண்டல் கதைதான். ஏனோ தெரியவில்லை. எல்லோருக்கும் பிடித்திருக்கிறது'' என்றார் அவர்.

எரிக் சீகல் அடிப்படையில் ஒரு ஆசிரியர். ஹார்வர்ட் பல்கலைக்கழகத்தில் இலக்கியத்தில் உயர்நிலைப் பட்டமும் முனைவர் பட்டமும் பெற்றவர். பின்னர், அதே பல்கலைக்கழகத்தில் பேராசிரியராக இணைந்து கொண்டார். ஓய்வு நோக்கில் விரிவாக உலக இலக்கியங்களை அவர் வாசித்துக் கொண்டிருந்த சமயம் அது.

கிட்டத்தட்ட அதே காலகட்டத்தில், பின்னர் உலகப் புகழ்பெறப் போகும் பீட்டில்ஸ் குழுவினரிடம் இருந்து அழைப்பு வந்தது. நாங்கள் உருவாக்கப் போகும் அனிமேட்டட் படத்துக்குத் திரைக்கதை எழுதியளிக்க முடியுமா? ஒப்புக்கொண்டார் சீகல். அதன் பிறகு தொடர்ந்து வாய்ப்புகள். எதுவும் பிரமாதமில்லை.

யாரோ எழுதிய கதைக்குத் திரைக்கதை எழுதுவதற்குப் பதில் நாமே ஏன் சுயமாக ஒரு கதை எழுதக் கூடாது? எழுதினார். சுமாராக வந்திருப்பதாகத் தோன்றியது. டைப் செய்யப்பட்ட காகிதங்களைக் கொண்டு சென்று சினிமா நபர்களை அணுகினார். முற்றிலும் நிராகரித்தனர்.

லூயி வாலஸ் என்னும் இலக்கிய ஏஜெண்ட், 'இந்த ஸ்க்ரிப்டை ஏன் நாவ

# எரிக் சீகல்!

லாக மாற்றி எழுதக்கூடாது?' என்றார்.

1970-ஆம் ஆண்டு வெளிவந்த லவ் ஸ்டோரியை அமெரிக்கர்கள் சட்டென்று பிடித்துக் கொண் டார்கள். படித்த ஒவ்வொருவரையும் அக் கதை பாதித்தது. ஏன் என்று' குறிப்பாகச் சொல்லத் தெரியவில்லை. நியூயார்க் டைம் ஸின் நம்பர் 1 பெஸ்ட் செல்லராக நாவல் உயர்ந்தபோது, அமெரிக்காவுக்கு வெளி யிலும் சீகல் பிரபலமடையத் தொடங்கி யிருந்தார். முப்பத்து மூன்று மொழிகளில் காதல் கதை மொழி மாற்றம் அடைந்தது.

அதே ஆண்டு அதே பெயரில் நாவல் திரைப்படமாக வெளிவந்தபோது, கிட்டத் தட்ட அதே வரவேற்பு கிடைத்ததைக் கண்டு திரையுலகம் திகைத்துப் போனது.

உலகமே கொண்டாடினாலும் தமது புத்தகங்கள் குறித்து நேர்மையான சுயவிமர் சனங்களையே சீகல் கொண்டிருந்தார்.

**எரிக், தம் கதைகள் குறித்து நேர்மையான சுய விமர்சனங்களைக் கொண்டிருந்தார்.**







ஜனவரி 17, 2010ம் தேதி எரிக் சீகல் மாரடைப்பால் மரணமடைந்தபோது, லவ் ஸ்டோரி எழுத்தாளர் சீகல் மறைந்துவிட்டார் என்றே உலகப் பத்திரிகைகள் அறி வித்தன. இறுதி மரியாதை அளிக்கும்போது, சீகலின் மகள் ஃபிரான்ஸிஸ்கா தம் தந்தையை இவ்வாறு நினைவுகூர்ந் தார்: ''நோய், சிக்கல்கள், தடங்கல்கள் என்று தம் வாழ்நாள் முழுவதும் அவர் போராடிக் கொண்டே இருக்கவேண்டி வந்தது. எதுவொன்றும் அவர் தன்னம் பிக்கையைச் சிதைக்கவில்லை; இறுதி வரை!''

கலக்க வருதுப்பா

# கல்கி

ரீடர்ஸ் கெட் ரெடி

திருநெல்வேலி மாவட்ட வாசகர்களே...
படைப்பாளிகளே... சமூகநல ஆர்வலர்களே...

## உங்களைத் தேடி வருகிறது கல்கி டீம்...

- உங்க ஊரைப்பத்தி அல்வா மாதிரி இனிக்கிற வரலாறு இருக்குமே...
- கட்டபொம்மன் மாதிரி கம்பீரமான மாமனிதர்கள் யார்யார் பிறந்திருக்கிறார்கள்?
- தாமிரபரணி ஆற்றைப் போல ஈரமான டூரிஸ்ட் ஸ்பாட் எது?
- குற்றாலச் சாரலைப் போல குளுகுளு செய்திகள் கொடுங்க...
- அரிவாள் மாதிரி பயமுறுத்தும் பிரச்னைகள் என்னென்ன?
- பாளையங்கோட்டை ஜெயில் மாதிரி பாரம்பரியச் செய்திகள் இருக்குமே...
- நவ திருப்பதி மாதிரி ஆன்மிகத் தலங்களை எழுதலாமே...
- டி.கே.சி. வட்டத்தொட்டி மாதிரி என்னென்ன இலக்கிய நிகழ்வுகள் நடக்குது?

**வாசகர்களே...**

எழுதி அனுப்புங்க... உங்கள் தகவல்கள்... இதழ்களுக்கு ஆதாரம்!

விவரங்கள் எதிர்ப்பக்கத்துல இருக்கே!



ஆமாம்! உங்கள் திருநெல்வேலி மாவட்டத்துக்கு 'கல்கி' டீம், நேரில் வந்து உங்கள் பிரச்னை / யோசனையை ஆராய்ந்து, உங்கள் வாய்ஸுக்கு 'கல்கி' இதழ் மூலம் மைக் கொடுக்கும்!

சில சிம்பிள் கண்டிஷன்ஸ்...

- கீழே உள்ள கூப்பனைக் கத்தரித்து ஒட்டி அனுப்பப்படும் கடிதம், படைப்பு மட்டுமே, பரிசீலனைக்கு எடுத்துக்கொள்ளப்படும்...
- ஒரு கடிதத்தில் 5 செய்திகள் / படைப்புகள் மட்டுமே இருக்கலாம்.
- ஒருவரே எத்தனை கடிதம், படைப்புகள் வேண்டுமானாலும் அனுப்பலாம் (தனித்தனி கூப்பனுடன்). பிரசுரமாகும் கடிதங்கள், யோசனைகள், படைப்புகளுக்குச் சன்மானங்கள் உண்டு.
- வாசகர்கள் தேர்வு செய்யும் மிகச் சிறந்த கடிதம் அல்லது யோசனை அல்லது படைப்புகளுக்குச் சிறப்புப் பரிசும் உண்டு...
- திருநெல்வேலி மாவட்டத்தின்.... பிரச்னைகளுக்கு - ☑ பெட்டிஷன் பாக்ஸ்

ஆன்மிக, வியாபார, சுற்றுலாத் தலங்களின் சிறப்புக்கு - ☑ நியூஸ் ஏந்தி பவன்

சிறுகதைகள், கவிதைகளுக்கு - ☑ வேடந்தாங்கல்

நகைச்சுவைக்கு - ☑ ஜோக் ஃபால்ஸ் என்றவாறு கூப்பனில் ☑ செய்து கவரின் மேல் ஒட்டி, உங்களின் முழு முகவரி, தொலைபேசி தொடர்பு எண் ஆகியவற்றைக் கட்டாயம் எழுதி அனுப்பவும்.

# வர்றோம்!

கடிதங்கள் வந்து சேரவேண்டிய கடைசி தேதி : 15.02.2010

**கலக்க வருதுப்பா கல்கி**
**திருநெல்வேலி மாவட்டம்**

☐ நியூஸ் ஏந்தி பவன் ☐ பெட்டிஷன் பாக்ஸ்
☐ வேடந்தாங்கல் ☐ ஜோக் ஃபால்ஸ்

47, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32



## நீங்க ச்சும்மா கோடு போடுங்க...
## நாங்க உடனே ரோடு போடறோம்!

# வாழ்வின் ஓசை!

அருட்சகோதரியாக பயிற்சிக்கென தங்கியிருந்த ஒரு கிராமத்தில் ஏற்பட்ட கசப்பான அனுபவங்களே, சகோதரி சந்திரா தம் பணியினைச் சற்றே மாற்றியமைத்துக் கொள்ள தூண்டுகோலாய் அமைந்து போனது. தலித் பெண்கள் மீது மிச்சம் மீதிகளாக இன்னமும் படர்ந்து கொண்டிருக்கும், தீண்டாமைக் கொடுமைகளிலிருந்து அவர்களை விடுவிக்க உறுதிகொள்ளச் செய்தது.

தலித் பெண்கள் வாழ்வில் பொருளாதார ரீதியாக உயர்வு அடையவும், தலித் இளம்பெண்களின் திறமைகளைப் புதிய வடிவங்களில் வெளிக் கொணரவும் அவர் உருவாக்கிய அமைப்பே சக்தி கலைக் குழு. அதற்கான குறியீடு இளம் மங்கையின் ஒரு காலில் சலங்கை. இன்னொரு காலில் விலங்கு. கைக்கொண்ட கருவி பறை. 'திக்கெட்டும் பறையோசை; ஒலிக்கட்டும் இசையாக!' - இதுவே அவரது லட்சியம். தனியொரு பெண்ணாக தாம் முன்னெடுத்துச் சென்ற புத்தம் புதிய முயற்சியில், பரவலாக வெற்றிபெற்றுள்ளார் சந்திரா.

பல நூற்றாண்டுகளாக இறப்புச் செய்தியையும், ஏலத் தகவலையும் சொல்லி வந்த, இழவு வீடுகளில் மட்டுமே முழங்கி வந்த பறையொலி - துணிந்து அதனை மக்கள் மத்தியில் மேடை ஏற்றி ஒலிக்கச் செய்தவர் அவர். அதுவும் பெண்கள் பறை கொட்டி ஒலியெழுப்பி முழங்கியபோது, அனைவருக்கும் ஆச்சர்யம்.

''பறையை எடு. எட்டுத் திக்கும் பறந்து சென்று ஒலிக்கச் செய் என என் மனம்தான் எனக்கு ஆணையிட்டது. முதலில் நான் அதனைக் கற்றுக்கொண்டேன். இளம்பெண்களுக்குக் கற்றுத் தந்தேன். பத்துப் பன்னிரண்டு பெண்கள் தேர்ச்சி பெற்றனர். 1993ல் சக்தி கலைக் குழு உதயமானது'' என்கிறார் திண்டுக்கல் சக்தி கலை பண்பாட்டு மைய இயக்குநர் சந்திரா.

''தமிழ்நாடு முற்போக்கு எழுத்தாளர் சங்கம், எங்களை வெளி உலகுக்கு அறிமுகப்படுத்தியது. த.மு.எ.ச. அமைப்பானது



தமிழகம் முழுவதுமாக நடத்தி வருகிற கலை இரவு மேடைகளில் வாய்ப்பளித்தது. அந்த வாய்ப்புகளைத் திறம்படப் பயன்படுத்திக் கொண்டது சக்தி கலைக் குழு.

எங்கள் நிகழ்ச்சி மட்டுமே இரண்டு மணி

நேரத்துக்கு மேலாக நிகழும்படி அமைத்துக் கொண்டுள்ளோம். பறை, தேரோட்டம், குச்சி யாட்டம், கைத்தாள இசை நடனம், கரகாட் டம், சக்கை ஆட்டம், துடும்பாட்டம், கோலாட்டம், மயிலாட்டம், சேவை யாட்டம், பங்காரா, கழியலாட்டம்,



• சந்திரா



செரியன் ஃபோக் டான்ஸ் உட்பட அதில் இடம்பிடித்திருக் கும். எங்கள் கலை நிகழ்ச்சிகளில் பாடல்கள், நாடகம், நடனம் வாயிலாகவும் விழிப் புணர்வு ஏற்படுத்தி வருகிறோம்.

2000ல் தென் ஆப்பிரிக்காவின் டர்பன் நகரில், எங்கள் குழுவினரின் முதல் வெளி நாட்டு நிகழ்ச்சி அரங்கேறியது. தமிழக மேடைகளும் எங்களை வளர்த்து விட்டன. கிராமியக் கோயில் திருவிழாக்களில் எங்களை அழைத்தார்கள். அவசியம் பறை ஒலிக்கும் எனக் கூறினேன். ஏற்றுக் கொண்டார்கள்.

2006ல் சக்தி கலைப் பண் பாட்டு மையம் என அடுத்த கட்டத்துக்கு நகர்ந்தோம். அழிந்து வரும் கிராமியக் கலைகளை மீட்டெடுக்கவும், பாரம்பரியக் கலை களை இன்றைய நாகரிகத்துக்கு மறு உருவாக்கம் செய்து வெளிப்படுத் தவும் இயங்கி வருகிறது மையம்.

ஒரு குழுவில் குறைந்தது எட்டு பேர் வேண்டும். ஒருமுறை மதுரை அரசரடி மைதான மேடையில் நூறு பெண்கள் பறை எடுத்து ஆடி முழங் கினர். பிரம்மாண்ட நிகழ்வு அது. சமீபத்தில் உடுமலைப்பேட்டையில் எங்கள் கலை நிகழ்ச்சி. பார்வையாளர் கள் பத்தாயிரம் பேர். இரண்டு மணி நேர நிகழ்ச்சி முடிவு பெற்றும், யாரும் எழுந்து செல்லவே இல்லை. எனக்குப் பூரிப்பாகவும், பிரமிப்பாக வும் இருந்தது.

இதுவரை ஆயிரத்து எண்ணூறு நிகழ்ச்சிகளை நிறைவு செய்துள் ளோம். பறையொலியும் உயர்ந்ததுதான் என்பதனை உலகுக்கு உணர்த்தியதில் எனக்கு மன நிறைவு. பிறந்த குழந்தையின் முதல் அழுகுரல் போல, பொக்கை வாய் குழந்தையின் முதல் சிரிப் பொலி போல வாழ்வின் உன்னத ஒலிகளில் ஒன்று பறையொலி!'' எனச் சொல்கிறார் சந்திரா.



சென்ற வருடம் பத்ரிநாத்தின் ஒரு பேட்டியை நியோ கிரிக்கெட் சேனலில் ஒளிபரப்பினார்கள். அதில், 'கடவுள் நேரில் வந்தால் என்ன கேட்பீர்கள்?' பெண் நிருபர் கேட்டார். பத்ரி இதற்கான பதிலை ஏற்கெனவே தயாராக வைத்திருந்ததுபோல பதிலளித்தார். "கடவுளே, நான் எப்போது என் முதல் டெஸ்ட் போட்டியை ஆடுவேன்?" ரஞ்சி போட்டிகளில் மாடாக உழைத்துத் தேய்ந்து போனவர் பத்ரி. ஒவ்வொரு சீஸனிலும் மாங்கு மாங்கு என்று ரன் எடுப்பார். பலனே இருக்காது. பல்லைக் கடித்துக்கொண்டு ஆடியவருக்கு, 30 வயதை நெருங்கும் சமயத்தில் ரத்தினமான ஒரு வாய்ப்பு.

ச.ந.கண்ணன்

ஆனால், தினேஷ் கார்த்திக் நீக்கப்பட்டதற்கு பங்களாதேஷுக்கு எதிரான டெஸ்ட்டில் அவர் எடுத்த பூஜ்யத்தையே காரணமாகச் சொல்கிறார்கள்.

விஷயம் இதுதான். இந்திய அணியில் முரளி விஜய், பத்ரி, மிதுன் என்று மூன்று புதிய தென்னக வீரர்கள். அந்தக் கூட்டத்தில் தினேஷ் கார்த்திக்கும் இடம்பெற்றால் வடக்கு என்னாவது? இந்தக் கேள்வி ஸ்ரீகாந்த் முன் நிச்சயம் வைக்கப்பட்டிருக்கும். பிராந்தியத் தேர்வு ஒழிக்கப்படாத இந்திய கிரிக்கெட் வாரியத்தில் ஸ்ரீகாந்த் மட்டும் என்ன, சாட்டையா சுழற்றமுடியும்? பிராந்திய பேதம் எதுவும் இல்லாமல் சிறந்த 11 கிரிக்கெட் வீரர்களைத் தேர்வு செய்கிற நிலைமை வர வேண்டும்.



பத்ரிநாத்

ஃபெடரருக்கு இன்னொரு கிராண்ட் ஸ்லாம் வெற்றி. எல்லா வெற்றிகளையும் மிக அழகாக எடுத்துக்கொள்கிறார். உணர்ச்சிவசப்பட்டு எந்தக் கருத்தும் வெளியிடுவதில்லை. முக்கியமாகத் தம் போட்டியாளர்களைப் பெரிதாக மதிக்கிறார். நடால் பற்றிப் பேச்சு வரும்போதெல்லாம் அவரைப் பாராட்டித் தள்ளுகிறார். ஒரு நல்ல வீரர் ஜென்டில்மேனாகவும் இருக்க

*ஆப்பிள் கடிப்பதுபோல அஃப்ரிடி கிரிக்கெட் பந்தைக் கடிக்கும் காட்சியைத் தொலைக்காட்சியில் பார்த்த கிரிக்கெட் ரசிகர்கள் கொஞ்சம் அதிர்ந்துதான் போனார்கள். நகத்தாலும் ஷூ ஸ்பைக்கினாலும் பந்தை டேம்பரிங் செய்து கேள்விப்பட்டிருக்கிறார்கள். ஆனால், இப்போதுதான் ஒருவர் பற்களால் பந்தின் தன்மையை மாற்ற முயற்சி செய்திருக்கிறார். 'வெறுப்பினால் அப்படிச் செய்தேன்' என்று பேட்டி கொடுக்கிறார் அஃப்ரிடி. டிவியில் நிச்சயம் இது காண்பிக்கப்படும், கையும்களவுமாக மாட்டிக்கொள்வோம் என்று தெரிந்தே அணியின் கேப்டன் ஒருவர் இந்தத் தவறைச் செய்திருக்கிறார். கிரிக்கெட் விதிமுறைகள் பலவீனமாக இருப்பதே இதற்குக் காரணம்.*

அஃப்ரிடி





வேண்டிய அவசியம் இல்லை. அப்படி பெரும்பாலான வீரர்கள் இருப்பதும் இல்லை. ஆனால் சபை நாகரிகம், குழு நாகரிகம் எல்லாம் அறிந்தவராக இருக்கிறார். இதனால் கிடைக்கும் பயன், எந்த மன அழுத்தமும் இல்லாமல் அவரால் டென்னிஸில் முழுக்கவனம் செலுத்த முடிகிறது.

# சேப்பாக்கத்துக்கு ஆபத்து?

சென்னை சேப்பாக்கம் ஸ்டேடியத்தை உலகக்கோப்பை ஆட்டங்களுக்காக மேம்படுத்தி வருகிறார்கள். ஆனால் சென்னைக்கு நிறைய சர்வதேசப் போட்டிகள் வழங்கப்படாதது குறித்து சென்னை கிரிக்கெட் சங்கம் ஏதும் கவலைப்படுவதில்லை. மெல்போர்னில் பாக்ஸிங் டே டெஸ்ட் மாதிரி சென்னை சேப்பாக்கத்தில் முன்பெல்லாம் சரியாகப் பொங்கல் சமயத்தில் டெஸ்ட் போட்டிகள் நடக்கும். ஆனால் கடந்த பதினைந்து வருடங்களாக அப்படியொரு நிகழ்வை அழித்துவிட்டார்கள். கடந்த எட்டு வருடங்களில் சென்னையில் ஒரே ஒரு ஒருநாள் போட்டி மட்டுமே நடந்திருக்கிறது. டெல்லி, நாக்பூர், மொஹலி, மும்பை போன்ற நகரங்களில் அடிக்கடி கிரிக்கெட் போட்டிகள் நடக்கும்போது பாரம்பரியம்கொண்ட சேப்பாக்கம் மட்டும் ஏன் வெறும் பயிற்சி ஆட்ட மைதானமாக மாறிப்போனது? சிட்டிசன் அத்திப்பட்டி மாதிரி, கிரிக்கெட் வரைபடத்தில் இருந்து சென்னை சேப்பாக்கமும் காணாமல் போகப்போகிறது!



'**அன்பிற்கும் உண்டோ அடைக்கும் தாழ்.**'

தமிழ் கூறும் நல்லுலகில் மேலே உள்ள குறளுக்கு அர்த்தம் தெரியாதவர்கள் அனேகமாக யாரும் இருக்க முடியாது. அப்படியும் அர்த்தம் தெரியாமல் ஏதாவது குழல்விளக்குகள் இருந்தால், அவர்கள் சற்று முன் வடபழனி விஜயா ஹெல்த் சென்டரின் அறை எண் 310-ல் வந்து தேன்மொழியும் சூர்யாவும் அமர்ந்திருந்த தைப் பார்த்திருந்தால் போதும். அடடா அவர்களது விழிகள் இதயங்களின் துடிப்பு களையும் தவிப்புகளையும் பரிமாறிக் கொண்டவிதம் ஒரு கம்பராமாயணக் காட்சி. அவர்களின் மறக்க முடியாத அந்த மூன்றாவது சந்திப்பில் அவர்கள் விலகி அமர்ந்திருந்தாலும் இதயங்கள் ஒன்றாகி விட்டிருந்தன.

புறப்படத் தயாராகிவிட்ட சூர்யாவிடம் எதையோ மறந்துவிட்டதாய் பாவித்த தேன்மொழி, பின் சட்டென ஞாபகம் வந்தவளாக, ''ம்ம்... ஆங்... உங்க பேரு... இத்தனை நாளா உங்க பேர்கூட தெரியாம... நான் ஒரு லூசு... அன்னைக்கு ஆட்டோவுல ஏறினதுக்கப்புறம்தான்... அடடா பேரைக் கூட கேக்காம விட்டுட்டோமேன்னு தோணுச்சு.''

சூர்யாவுக்கும் அது இப்போதுதான் நினைவுக்கு வந்தது. பர்ஸைத் திறந்து விசிட்டிங் கார்டை நீட்டியபடி...

''பரவாயில்லை. ஐ'ம் சூர்யா... ஸ்டெம்ஸெல்ஸ் மார்க்கெட்டிங்ல இருக் கேன். அன்னைக்குக்கூட அது விஷயமா தான் கல்கத்தா போய்க்கிட்டிருந்தேன்.'' அங்கு இங்கு சுற்றி பேச்சு ஒரு ஆபத்தில் மையமிடுவதை உணர்ந்த சூர்யா சட்டென எழுந்தான்.

அவள் முகம் வாடியது. அது அவனுக் குப் பிடித்திருந்தது. புறப்பட்டவன் வாச லுக்கு வந்து திரும்பிப் பார்த்தான்.

அவள் புரண்டு படுத்துவிட்டிருந்தாள். மனசு என்னவோபோலிருந்தது. இது அவள் சுபாவம்... பழகவேண்டும்... மனசை இலேசாக்கிக்கொண்டான்.

வெளியே அவன் வந்தபோது வாசலில் நாற்காலியில் அமர்ந்தபடி எதையோ பேசிக் கொண்டிருந்த கிரிஜாவும் அருணாச்சலமும் பட்டென எழுந்துகொண்டனர். முகத்தில் ஆர்வம்; கண்களில் ஆவல்.

''ஒண்ணுமில்ல. எல்லாம் க்ளியர்... இப்பவே கூட அவங்களை டிஸ்சார்ஜ் பண்ணிடலாம்... இப்ப நான் அவங்ககூட அதிகமா பேச வேணாம்ன்னுதான் பாதி யில கிளம்பறேன்.''

அருணாச்சலம் நெகிழ்ச்சியுடன் சூர்யாவின் கைகளைப் பிடித்துக்கொண் டார்.

''சார் கவலைப்படாதீங்க... தேன் மொழியோட வாழ்க்கையில இனி மகிழ்ச்சியைத்தவிர வேற வார்த்தையே கிடையாது... கவலையை விடுங்க.''

**அ**டுத்த நாள் தேன்மொழியின் உற் சாகத்தைப் பார்த்து டாக்டர்களே அவளை வீட்டுக்கு அனுப்பிவிட முடிவுசெய்தனர். அருணாச்சலம் இதனைத் தன் மகளிடம் தெரிவித்ததும், சூர்யாவின் வருகைக்காகக் காத்திருந்த தேன்மொழிக்கு முதலில் வருத்தம்தான் தோன்றியது. சட்டென அவன் ஃபோன் நம்பருக்குத் தன் முதல் குறுஞ்செய்தியை அனுப்பினாள். அதனை எப்படி அனுப்பினால் ரசிப்பான் என நினைத்தவள், ஆங்கிலத்தில் அவசரமாகத் தட்டினாள்.

'இன்று நீங்கள் ஒரு சிறந்த முட்டாளாக விரும்பினால், உடனே என்னைப் பார்க்க விஜயா ஹெல்த் சென்டர் அறை எண் 310க்கு வரலாம்...பை... தேன்மொழி'

சில மணித்துளிகளில் சூர்யாவின் எண்ணிலிருந்து பதில் குறுஞ்செய்தி வந்த தகவலை ஆவலுடன் தேன்மொழிக்குத்

தெரிவிக்கும் விதமாக தொலைபேசி அலறியது. அப்போது இருவரும் அறையை விட்டுப் புறப்பட்டுகொண்டிருந்தனர்.

'நானொரு அதிர்ஷ்டசாலியாக மாற வேண்டி முட்டாள்தனங்களைத் தொடர்ந்து செய்யச் சித்தமாக இருக்கிறேன். மன்னிக்கவும். உங்களை வீட்டில் பூரண நலத்துடன் பார்க்கக் காத்திருக்கிறேன்- சூர்யா.'

அருணாச்சலம் காரிடாரில் நடக்க, ஓட்டுநர் இதர பைகளைத் தூக்கிக்கொண்டு முன்னால் நடக்க, தேன்மொழி அப்பாவைப் பின் தொடர்ந்தவளாக, அவசரமாக கைபேசியில் பதில் தட்டிக்கொண்டிருந்தாள்.

'நானொரு அவசரக் குடுக்கை. அதிகமாகப் பேசியிருந்தால் மன்னிக்கவும்...' தேன்மொழி பதிலுக்குக் காத்திருந்தாள்.

அப்பா கேஷ் கவுண்டரில் பில்கட்டி முடித்தபின்னும் வரவில்லை. அருணாச்சலம் மகளை அழைத்துக்கொண்டு காரில் ஏறினார். பதில் இன்னமும் வரவில்லை.

''என்னம்மா டல்லா இருக்கே... ஆர் யூ ஆல்ரைட்?''

''யெஸ் ப்பா'' சமாளித்தாள்.

கார் காம்பவுண்டைத் தாண்டுவதற்குள் பதில் வரவேண்டுமெனத் தியானித்தாள். கார் காம்பவுண்டைத் தாண்டி ஆற்காடு சாலையில் இறங்கியது. தேன்மொழி அமைதியாகக் கண்களை மூடினாள்.

மனத்தைப் பதற்றமில்லாமலிருக்குமாறு அமைதிப்படுத்தினாள். கண்களை மூடினாள். அப்படியே பின் சீட்டில் சாய்ந்தாள். ஆனாலும் மனசு அடங்க மறுத்தது. பதினைந்து நிமிடம் ஆகிவிட்டது.

''அப்பா பாட்டு எதுனா போடுங்கப்பா.''



**''நான் யாருக்கும் பயப்பட மாட்டேன்...!''**

**''மெதுவாகக் கத்துங்கள் மன்னா... அந்தப்புரத்தில் இருக்கும் மகாராணியின் காதில் விழுந்து விடப் போகிறது!''**

**- கே.தண்டபாணி**

'தாலாட்டுதே வானம் தள்ளாடுதே மேகம்' சிக்கவேஷனுக்காகப் பாடுவதைப் போல இருந்தது. கைபேசி சிணுங்கியது. பதற்றத்தோடு அவள் எடுத்த அவசரம், ஒளியின் வேகத்தோடு போட்டி போடுவதாக இருந்தது.

'மன்னிக்கவும். தவிர்க்கவே முடியாத அலுவல் நிமித்தமான சந்திப்பு காரணமாகப் பதில்கூற முடியவில்லை.... ம்ம்ம்ம் காதல் என்பது அனைத்தையும் ஏற்றுக்கொள்வது.... சூர்யா.' கார் வடபழனி சிக்னலுக்காகக் காத்திருந்தது.

'நாளை சந்திக்கலாமா...தேன்மொழி'

'ஹெல்த் ஓகேவா... சூர்யா...'

'ம்ம் ஓகே... நாளை மாலை... தேன்மொழி'

கார் இப்போது பவர் ஹவுஸை கிராஸ் பண்ணிக்கொண்டிருந்தது.

'எங்கே..? - சூர்யா'



**அதிர்ஷ்டசாலியாக மாறவேண்டி முட்டாள்தனங்களைத் தொடர்ந்து செய்யச் சித்தமாக இருக்கிறேன்.**

'ம்ம்... காலை சொல்லட்டுமா..!.....தேன்மொழி'

நீலாங்கரையின் ப்ளூலாகூன் வாசலில் மாலை 3 மணிக்கே வந்துவிட்டான் சூர்யா. பைக்கை ஸ்டாண்டில் நிறுத்திவிட்டுக் காத்திருந்தான். அவனுடைய ஃப்ளாஷ் பேக்குகளை முழுமையாக அறிந்தவனாகையால் எங்காவது ஒளிந்திருக்கிறாளா என அலசிப் பார்த்தான்

நல்லவேளை... இல்லை. தேன்மொழியின் கார் சீக்கிரமாகவே ஹோட்டல் காம்பவுண்டுக்குள் அனுமதி பெற்று மரங்களினூடே வந்தது.

சூர்யாவுக்குப் பதற்றம். இருவருக்குமான நான்காவது சந்திப்பு. சவுக்குமரங்கள் அடர்ந்திருந்தன. அருகில் கடல் தொடர்ந்து ஓசையிட்டுக்கொண்டிருந்தது.

காரிலிருந்து தேன்மொழி ஒரு வன தேவதையைப் போல இறங்கினாள். அவளது உடலிலிருந்து வெளிப்பட்ட நறுமணம் இந்நேரம் கடலைப் பொறாமை கொள்ள வைத்திருக்கும்.

அவனைப் பார்த்து கண்களாலும் அளவற்ற வெட்கத்துடன் சிரித்தாள். காற்றில் நெற்றிப் பக்கமாக வந்து விழுந்த முடிகளை ஒதுக்கியவள், ''ரொம்ப லேட் பண்ணிட்டேனா?'' என்றாள்.

சூர்யா தலையசைத்தான். காரின் பின்பக்கமாக வந்து நின்று மரங்களினிடையே தெரியும் கடலை ரசித்தவள் அவனை அங்கு வந்து பார்க்கும்படி அழைத்தாள். சூர்யா அவள் அருகே சென்றான்.

காரின் பின்பக்கமாகக் கடலை நோக்கியவாறு இருவரும் நின்றுகொண்டிருந்தனர்.

சூர்யா முழுவதுமாக மாறிப்போயிருந்தான். அவன் முன் காலம் உறைந்துவிட்டிருந்தது. இப்போது அவனிடம் இறந்த காலம், எதிர்காலம், நிகழ்காலம் எதுவும் இல்லை.

தேன்மொழி சூர்யாவைப் பார்த்தாள். பின் தலைகுனிந்தவள், ''நான் உங்ககிட்ட ஒரு உண்மையைச் சொல்லணும். அதுக்காகத்தான் உங்களை இங்கே வரச் சொன்னேன்'' என்றாள்.

**(மீன்கள் துள்ளும்)**

இரவு நேரம், பழனி யாண்டவர் கலை மற்றும் பண்பாட்டுக் கல்லூரி, ஆங்காங்கே கட்டடங்கள், நீள நீளமாய் வராண்டாக்கள், டியூப் லைட் வெளிச்சப் பரவலுக்குக் கீழே கொத்துக் கொத்தாய் ஆண்கள். மிகுந்த ஆர்வத்துடன் படித்துக் கொண்டிருந்தனர். ஒருவேளை, கல்லூரி விடுதி மாணவர்களோ...? நெருங்கிச் சென்று விசாரித்தோம்.

அவர்கள் அனைவரும் இளைஞர்கள், கல்லூரிப் படிப்புகளில் தேர்ச்சி பெற்று, வேலை தேடிக்கொண்டிருப்பவர்கள். அந்த இளைஞர்களைப் பார்க்கவும், பேசவும், சந்தோஷமாக இருந்தது. அவர்கள் கண்களில் அத்தனை நம்பிக்கை. மனசுக்குள் புதிய வெளிச்சம்.

"அரசுத் துறையில் பணி புரியும் முன்னாள் மாணவர்களுள் சேவை மனப்பான்மையுள்ளோர் ஒன்றிணைந்து, 'நண்பர்கள் பயிற்சி மையம்' உருவாக்கியுள்ளோம் என்கிறார் மைய ஒருங்கிணைப்பாளர் கே.சுப்பிரமணியன். பொதுவாக அரசுப் பணிகள் தற்போதும் கிராமப்புற, படித்த இளைஞர்களுக்கு எட்டாக் கனியாகத்தான் இருந்து வருகிறது. அதனைத் தகர்க்கவும், கிராமப்புற இளைஞர்களுக்கு அரசுத் துறைகளில் வேலை வாய்ப்பு முறையாகக் கிடைக்கவும் உருவானதே இந்த அமைப்பு.

அரசுப் பணிகளுக்கென அதன் தேர்வுகளுக்கு இவர்களை நாங்கள் தயார் செய்கிறோம். முற்றிலும் இலவசப்பயிற்சி, ஏழை மற்றும் நடுத்தர வர்க்க இளைஞர்கள், இந்த வாய்ப்பினைப் பயன்படுத்திக் கொள்கின்றனர். அவர்கள் வாழ்க்கையில் ஒளியேற்றிட உருவானதே எங்கள் அமைப்பு. அதனால், எங்கள் அமைப்பினர் அனைவரும் பொதுநலன் நோக்கில் செயல்பட்டு வருகிறோம். பயிற்சி பெறுபவர்களுக்குத் தேவையான துறை சார்ந்த படிவங்கள், புத்தக வெளியீடுகளைப் பெற்றுத் தருகிறோம்.


கே. சுப்பிரமணியன்




வாரத்தில் இரண்டு நாட்கள், பயிற்சி வகுப்புகள். சனிக்கிழமை காலை பத்து மணி தொடங்கி, இரவு எட்டு மணி வரை. ஞாயிறு காலை எட்டு மணி தொடங்கி, இரவு எட்டு மணி வரைக்கும். எல்லோரும் வெளியூர்க்காரர்கள். திண்டுக்கல், ஈரோடு, கோவை, மதுரை, ராமநாதபுரம் போன்ற மாவட்டங்களிலிருந்து வாரா வாரம் வந்து இரண்டு நாட்கள் தங்கிப் படித்துச் செல்கின்றனர்.

தமிழ்நாடு பப்ளிக் சர்வீஸ் கமிஷன் தேர்வுகள் போலவே,



# தெரியுது... வெளிச்சம்!

இவர்களுக்கும் அடிக்கடி தேர்வுகள் வைத்து வழி நடத்துகிறோம். 1997ல் பொது அறிவுக் கழகம் என்கிற பெயரில், தொடங்கி நடத்தினோம். அந்த ஆண்டு முப்பத்தைந்து பேர் பயிற்சி பெற்றனர். சர்வீஸ் கமிஷன் தேர்வில் அந்த முப்பத்தைந்து பேரும் தேர்ச்சி அடைந்தனர். இடையில் பத்து வருஷம் தொய்வாகிப் போனது எங்கள் செயல்பாடு.

பின்னர் மீண்டும் புத்தெழுச்சியுடன், 2008ல் அருள்மிகு பழனியாண்டவர் கலை மற்றும் பண்பாட்டுக் கல்லூரி நண்பர்கள் பயிற்சி மையம் துவக்கினோம். 2008ல் அறுபது இளைஞர்கள் பயிற்சிக்கு வந்து சேர்ந்தனர். சர்வீஸ் கமிஷன் பரீட்சையில் முப்பத்திரண்டு இளைஞர்கள் தேர்ச்சி பெற்று, குரூப் டூ பிரிவில் அரசுப் பணிகளில் இணைந்து விட்டனர். எங்களுக்கு அது மிகுந்த உற்சாகம் அளித்தது. இந்த வருடம் (2009-10) சுமார் இருநூற்றைம்பது இளைஞர்கள், இந்த மையத்தில் சர்வீஸ் கமிஷன் தேர்வுகளுக்காக தங்களைத் தயார் செய்து கொண்டு வருகின்றனர். 1997 மாதிரியே நூறு சதவிகிதம் தேர்ச்சி பெறுவார்கள் என்கிற நம்பிக்கை எங்களுக்கு!'' என்கிறார். அதை ஆமோதிப்பது போல, ''எங்களுக்கான வெளிச்சம் அதோ தெரியுது... பாருங்கள்!'' என கோரஸாக ஓங்கிக் குரல் கொடுக்கின்றனர் பயிற்சி மைய மாணவர்கள் அனைவரும். ○




# பின்னிரவு பனிக்காலம்

இந்தப்
பனி இரவில்
உன் பார்வை பாதங்களில் படுகின்றது
ஆடையில் மறைத்துக் கொள்கிறேன்

கண்களைப் பார்க்கின்றாய்
தலை கவிழ்கிறேன்

பிடரியில் விழுந்து கொண்டிருக்கும்
ஒளிக் கற்றைகள்
தரும் அவஸ்தையிலிருந்து மீள
நானாகப் பேசுகிறேன்

மறுமொழியாய்
ஏதோ சொல்லியபடி
பின்னிரவில்
என்னை நீங்கிச் செல்கின்றாய்

நான்
என் பாதங்களை
வருடிக் கொடுத்தபடி
உன்னில் மூழ்கிப்போகிறேன்

எப்போதும் போல
ஒளிக்கற்றையென
என் பின்பாக விழுந்து
அவஸ்தைக்குள்ளாக்குகிறது
உன் நிழல்.



# பெருந்துயில்

அவளது பெருந்துயில்
கலைத்தெழ முடியாததாக இருக்கிறது
திறக்கப்படாத வாசற்கதவினைப் போல



கனவுகளினாலும்
காதலின் தீராத நோவினாலும்
இரவு விழித்திருந்தாள்
அதிகாலைத் துயில் அவளைப்
போர்த்தியிருந்தது

அந்தப்
பெருந்துயிலிலும்
சிற்றில் விளையாடும் இளம்பெண்கள்
வாசல் தெளிக்கும் நீரின் ஓசையில்
காதலனின் காலடியோசைக்கு
ஏங்கியிருந்தாள்

உறக்கமும்
ஏக்கமும் விழிகளில் படர்ந்திருந்தன
காமனை வேண்டிய நாச்சியாரைப் போல
அவளும்
கனவில் அவனிடம் நேர்ந்து கொண்டாள்

அவளது தோழி
மூடிய அறைக்கதவைத் திறக்கச்
சொல்லிய
அதிகாலைக்கு முன்பு
மணல் வட்டமிட்டு
காதலை அடைந்திருந்தாள்
கனவில்.

சக்தி ஜோதி
கவிதைகள்











# தீவுகளின்

## வாமன தேசங்கள் 5

மனிதர்கள்தான் பிற நாடுகளில் நிலமோ வீடோ வாங்குவதுண்டு. ஆனால், ஒரு நாடு அப்படி ஒரு முயற்சியில் ஈடுபடுகிறது. அது மால்டீவ்ஸ்; அதிகார பூர்வமாக மால்டீவ்ஸ் குடியரசு. இந்தியா, இலங்கை, ஆஸ்திரேலியா... என்று பல நாடுகளில் நிலம் வாங்கிப் போடும் முயற்சியில் ஈடுபட்டிருக்கிறார் மால்டீவ்ஸ் குடியரசுத் தலைவர் முஹம்மது நஷீத்.

இதென்ன ஆக்கிரமிப்பு என்று கோபப்பட வேண்டாம். மால்டீவ்ஸ் முயற்சிக்கு ஒரு சோகப் பின்னணி உண்டு. கடல்மட்டம் உயர்ந்து கொண்டே வருவதால் 2100ல் அந்த நாட்டுக்குப் பெரும் பாதிப்பு உண்டாக வாய்ப்பு உண்டு. சொல்லப்போனால் அந்த நாடே இல்லாமல் போய்விடும் அபாயமும் நிகழலாம். இதற்கு ஒரு முன்னோட்டம் மாதிரி தமிழகத்தைச் சில ஆண்டுகளுக்கு முன்பு தாக்கிய சுனாமி, மால்டீவ்ஸை மேலும் அதிகமாகவே தாக்கியிருக்கிறது.







# மாலை!

உலகை இறைவனின் நன்கொடையாகக் கருதி, பகிர்ந்துண்டு புரிதலோடு நடந்துகொள்ளும் தன்மையை மனிதன் இழந்ததற்கு அடையாளமாக 'அகதிகள்' என்ற இனம் நிலவி வருவதைப் பார்க்கிறோம். இயற்கையை மதிக்காமல் தாறுமாறான செயல்களில் ஈடுபடுவதால் 'வெப்பநிலை அகதிகள்' (Climate refugees) என்ற ஒரு புதிய இனமும் உருவாகிவிட்டது. 'மால்டிவ்ஸை விட்டுச்செல்ல வேண்டுமென்று நாங்கள் விரும்பவில்லை. ஆனால், அதற்காக வெப்பநிலை அகதிகளாகக் கூடாரங்களில் வாழ முடியுமா?' என்று பரிதாபமாகக் கேட்டிருக்கிறார் அந்த நாட்டு

ஜி.எஸ்.எஸ்.

# பூத்துளிகள்!

* ஆசியாவில் மிகச்சிறிய நாடு - பரப்பளவு மக்கள்தொகை இரண்டிலுமே. * உலக அளவில் 27வது மிகச்சிறிய நாடு. மக்கள்தொகை அளவில் சிறிய நாடுகள் பட்டியலில் 57வது இடம். * உலகின் மிகவும் உயரக்குறைவான நாடு என்றும் கூறலாம் (கடல் மட்டத்தை விட சராசரியாக நான்கு அடி மட்டுமே அதிகமாக இருக்கிறது.) * குறைவான தாவரங்கள். நிலத்தில் வாழும் மிருகங்களும் குறைவு தான். ஆனால் கடல்வாழ் உயிரினங்களில் - முக்கியமாக மீன்களில் அப்படியொரு வெரைட்டி. திமிங்கல சுறாக்களுக்கும் மால்டீவ்ஸ் பகுதியில் வசிக்க தனிப் பிரியம்! * அரசுத் தலைவர் ஜனாதிபதி. ரகசிய வாக்குப்பதிவின் மூலம் தேர்தல் நடைபெறும். * முஸ்லிம்களுக்கு மட்டுமே வாக்குரிமை. * மால்டீவ்ஸ் குடியரசுக்குள் நுழைய முன்னதாகவே விசா பெற்றிருக்க வேண்டுமென்பதில்லை. குறிப்பிட்ட துறைமுகங்களை அடையும் வெளிநாட்டினருக்கு, உரிய இமிக்ரேஷன் நிபந்தனைகள் ஒத்துப்போனால் உடனடியாக நுழைய அனுமதி அளிக்கப்படுகிறது. முப்பது நாள் விசா எல்லா வெளிநாட்டினருக்கும் வழங்கப்படுகிறது. சுற்றுலாவை வளர்ப்பதில் மிக முனைப்பு காட்டுகிறார்கள். * கடலும் வானமும் இங்கு பல நிறங்களில் வித்தை காட்டுகின்றன. சுற்றுலா அதிகரிப்புக்கு இதுபோன்ற இயற்கைக் காட்சிகள் முக்கிய காரணம். * மாலத் தீவுக்கு 'மாலா த்வீபா' என்ற வேறொரு பெயரும், அதற்கு 'தீவுகளின் மாலை' என்ற பொருளும் உண்டு. * முஸ்லிம் நாடு என்றவுடன் இங்கு பெண்களுக்கான முக்கியத்துவம் குறித்து சந்தேகப்படத் தேவையில்லை. சுல்தானாக்கள் நாட்டையே ஆட்சி செய்ததுண்டு. இப்போதும் அரசுப் பணியாளர்களாக நிறைய பெண்கள் உண்டு. படிப்பில் மட்டுமல்ல; பாராளுமன்றத்திலும் பெண்களைக் காண்பது வெகுசகஜம்!

ஜனாதிபதி.

சென்ற வருடம் அக்டோபர் மாதத்தில், உலக வெப்பமயமாக்கலால் தம்மைப் போன்ற நாடுகளுக்கு ஏற்பட்டிருக்கும் அபாயத்தை உணர்த்தும் வகையில், 'உலகின் கடலுக்குக்கீழ் ஏற்பாடு செய்யப்பட்ட முதல் அமைச்சரவை' மால்டீவ்ஸில் நடத்தப்பட்டது.

ஒரே சுனாமிதான் இந்தியாவையும் மால்டீவ்ஸையும் தாக்கியது என்பதைத் தவிர ஆழமான வேறு சில தொடர்புகளும் இந்த இரு நாடுகளுக்கிடையே உண்டு.

முதன்முதலில் இத்தீவுகளில் கால் பதித்தவர்கள் இந்தியர்கள் தான். மீனவர்கள். முதலில் மலையாளிகள். அடுத்து தமிழர்கள், பிறகு இலங்கைவாசிகள்.

மால்டீவ்ஸ் என்பது ஒரு தீவுக்கூட்டம். எவ்வளவு தீவுகள் தெரியுமா? 1190! ஆனால் இவற்றில் 200 தீவுகள்தான் மக்களின் வசிப்பிடம். மக்கள் தொகை சுமார் நான்கு லட்சம் மட்டுமே. அதிலும் நான்கில் ஒரு பங்கு மக்கள், தலைநகரான மாலேவில் வசிக்கிறார்கள்.

பிரிட்டனிடமிருந்து 1965ல் சுதந்





திரம் பெற்றது மால்டீவ்ஸ். தொடர்ந்த மூன்று வருடங்களுக்கு மன்னர் முஹமது பரீத் தீதி என்பவர் ஆட்சி செய்தார். 1968ல் 'இனி இந்த நாடு மால்டீவ்ஸ் குடியரசு' என்று அறிவிக்கப்பட்டது. ஆனால், மற்ற படி அரசில் பெரிய மாற்றமில்லை. மன்னருக்குப் பதில் ஒரு ஜனாதிபதி; அவ்வளவுதான். புதிய ஜனாதிபதியின் பெயர் இப்ராஹிம் நாசிர். அவருக்கு எக்கச்சக்க எதிர்ப்பு தோன்ற 1978ல் அவர் சிங்கப்பூருக்குப் பறந்து விட்டார் - அரசு கருவூலத்திலிருந்து லட்சக்கணக்கான டாலரும் கூடவே மாயம்!

மீண்டும் மீண்டும் புரட்சிகள் வெடித்துக் கொண்டிருந்தன. நவம்பர் 1988ல் மால்டீவ்ஸ் அரசுக்கு எதிராகப் புரட்சி நடைபெற்றபோது, 'இந்தியா நீயே அபயம்' என்று கண்ணனை நோக்கிய திரௌபதியைப் போல மாலே அரசு கதற, இந்திய ராணுவம் ஒரு சாகசச் செயலில் ஈடுபட்டது. ஆக்ராவிலிருந்து இந்திய ராணுவ வீரர்கள் ஒரு விமானத்தில் கிளம்பினார்கள். இரண்டாயிரத்துக்கும் அதிகமான கிலோமீட்டரை இடையில் எதற்கும் நிற்காமலேயே அந்த விமானம் கடந்தது. பாராசூட்டில் மால்டீவ்ஸ் விமான நிலையத்தில் இறங்கிய ராணுவத்தினர் அதைத் தங்கள் வசம் கொண்டு வந்திருந்த புரட்சியாளர்களை வெளியேற்றினர். கத்தியின்றி ரத்தமின்றி துப்பாக்கி முனையில் மட்டுமே நடத்தப்பட்டது இந்தச் சாகசம்.

(அடுத்த வாரம்
வேறொரு வாமன தேசம்...)

**மேஷம்:** வெற்றிகள் நிறைந்த வாரம். சுபச் செய்திகள், வீடு/மனை, சொத்துகள், பணவரவு, மனமகிழ்ச்சி... என இந்த வாரத்தில் நலம் தரும் பலன்கள்தான்!

வெள்ளிக்கிழமை துர்கைக்குத் தீபம் ஏற்றி வணங்கினால் மனத்தில் நினைத்த காரியம் வெற்றி பெறும்.

**ரிஷபம்:** மிதமான பலன்களைத் தரும் வாரம். உத்தியோகத்தில் உயர்வு கிட்டும். இடமாற்றமும் ஏற்படலாம். வாக்குவாதங்கள் சங்கடங்களைத் தரும். பண வரவுக்குக் குறைவில்லை. உடல் நலனில் கவனம் தேவை.

செவ்வாய்க்கிழமை முருகன் கோயிலுக்குச் சென்று விளக்கு ஏற்றுங்கள். மன பாரம் குறையும்.

**மிதுனம்:** மிகவும் உன்னதமான வாரம். பணவசதி, படிப்பில் முன்னேற்றம், திருமண பந்தம், மகப்பேறு பாக்கியம், தூர தேசப் பயணம், வியாபார லாபம்... ப்ச்... எல்லாமே சக்ஸஸ்தான் இந்த வாரம்.

பெருமாள் கோயில் சென்று வணங்குங்கள்... நற்பலன்கள் கூடும்.

**கடகம்:** மன நிறைவான வாரம். ஆரோக்கியம் சீராகும். புண்ணிய ஸ்தலம் செல்வீர்கள். கல்வியில் முன்னேற்றம் உண்டு. குழந்தைகளால் மன மகிழ்ச்சி ஏற்படும். புதிய வேலை வாய்ப்பு கிட்டும். உத்தியோக உயர்வு உண்டு.

திங்கட்கிழமை அம்பிகை வழிபாடு செய்ய, நினைத்தது நிறைவேறும்.

தமிழ் பார்கவி

07.02.10 முதல்

13.02.10 வரை

**சிம்மம்:** மகிழ்ச்சியான வாரம். மனச் சுமை குறையும். பண வரவு கூடும். செல வுகள் குறையும். திருமண முயற்சி வெற்றி பெறும். நண்பர், உறவினர்கள் மூலம் நல்ல செய்தி கிட்டும். குழந்தைகள் இடம் மாறிச் செல்ல நேரிடும்.

*ஞாயிற்றுக்கிழமை சிவபெருமானை வணங்குங்கள். சிக்கல்கள் தீரும்.*

**கன்னி:** எண்ணியவை ஈடேறும் வாரம். எதிர்ப்பு தொல்லைகள் விலகும். உடன்பிறப்புகள் உதவுவர். வியாபாரத்தில் முன்னேற்றம் உண்டு. உத்தியோகப் பிரச் னைகள் முடிவுக்கு வரும். சொத்துப் பிரச்னைகள் தீரும். ஆரோக்கியம் சீராகும்.

*புதன்கிழமை மகாவிஷ்ணுவுக்கு தீபம் ஏற்றி வழிபட நல்லது நடக்கும்.*

**துலாம்:** கலகலப்பான வாரம். திருமண முயற்சி பலன் தரும். வீடு/மனை வாங்க சிறந்த தருணம். புதிய தொழில் தொடங்கு வீர்கள். ஆரோக்கியம் சீராகும். எதிர்ப்புகள் விலகும். குழந்தைகளுக்கு இட மாற்றம் உண்டு. செலவுகள் கட்டுக்குள் இருக்கும்.

*வெள்ளிக்கிழமை மகாலக்ஷ்மியை வணங்க, மன சஞ்சலம் தீரும்.*

**விருச்சிகம்:** கொஞ்சம் கரடுமுரடான வாரம். நெருங்கியவர்கள் பிரிந்து செல்வர். ஆரோக்கியத்தில் அக்கறை தேவை. கல்வி யில் கவனம் செலுத்தவும். மறைமுக எதிர்ப் புகள் தோன்றும். வேலையில் பளு கூடும். குடும்ப உறவுகளிடையே அனுசரணை தேவை.

*செவ்வாய்க்கிழமை முருகப் பெரு மானுக்கு தீபம் ஏற்றி வணங்குங்கள். சங்கடங்கள் குறையும்.*

**தனுசு:** மனசுக்கு நிறைவான பலனைத் தரும் வாரம். தொட்டது துலங்கும். மன சஞ்சலம் தீரும். கல்வியில் முன்னேற்றம் உண்டு. குடும்பத்தில் நிலவிய பிரச்னைகள் தீரும். பண வசதி பெருகும். குழந்தை களால் மன மகிழ்ச்சி ஏற்படும்.

*வியாழக்கிழமை தட்சிணாமூர்த்தி வழி பாடு, நற்பலன்களை அளிக்கும்.*

**மகரம்:** சந்தோஷமான வாரம். மன சஞ்சலம் தீரும். சுபகாரியப் பேச்சுவார்த்தை பலன் தரும். உறவினர் வழியில் நற்செய்தி கிட்டும். கல்வியில் முன்னேற்றம் உண்டு. பணப்பிரச்னை தீரும். ஊதிய உயர்வு உண்டு. வியாபார அபிவிருத்தி உண்டு. மேற்படிப்புக்கு வெளிநாடு செல்வீர்கள்.

*சனிக்கிழமை ஆஞ்சநேயர் வழிபாடு, மன திடத்தை அளிக்கும்.*

**கும்பம்:** எழுச்சி தரும் வாரம். பூர்விகச் சொத்து பாகப் பிரிவினை ஆகும். கடன் தொல்லை தீரும். செலவுகள் கட்டுக்குள் இருக்கும். மன உளைச்சல் தீரும். வைத் தியச் செலவு குறையும். புதிய தொழில் முயற்சி தொடங்க ஏற்ற காலம்.

*சனிக் கிழமை ஆஞ்சநேயருக்கு தீபம் ஏற்றி வழிபட, நற்பலன் மிகும்.*

**மீனம்:** உற்சாகமான வாரம். பத்திரிகை யில் பெயர் வரும். பண வரவு உண்டு. கூட்டுத் தொழிலில் ஆதாயம் உண்டு. செல வுகள் பயன் உள்ளதாக இருக்கும். கல்வி யில் முன்னேற்றம் உண்டு. ஆரோக்கியம் சீராகும். வேலையில் நற்பெயர் கிட்டும். ஊதிய உயர்வு ஏற்படும்.

*வியாழக்கிழமை ராகு/கேது வழிபாடு நன்மைகளைத் தரும்.* ○

# நடக்குமென்பார்; நடக்கும்!







இனிப்பான ஊர்கள் என்றால் அது திருப்பதியும் பழனியும்தான். அதிலும் ஹைடெக் இனிப்பென்றால் அது பழநி பஞ்சாமிர்தம். திருப்பதியின் லட்டுக்கு இணையாக தென்னகத்தில் புகழ்பெற்றதும் பஞ்சாமிர்தம்தான். பாலதண்டாயுதபாணிக்கு அரோகரா என்று சொல்லும்போது பஞ்சாமிர்தத்துக்கும் அரோகரா என்று கோஷங்களும் எழுகின்றன. முன்பு தனியார் வசமிருந்த பஞ்சாமிர்தத் தயாரிப்புப் பணியை இப்போது கோயில் தேவஸ்தானமே கவனிக்கிறது. தயாரிக்கப்பட்ட பஞ்சாமிர்தத்தை மலைக்குக் கொண்டு வருவதற்கென தனியான வின்ச்சும் இயக்கப்படுகிறது.

முருகன் குறிஞ்சி நிலத்துக்காரன் என்பதால் பஞ்சாமிர்தத்தில் தேனின் பங்கு அதிகம். பஞ்சாமிர்தத்துக்கென பிரத்யேகமாக விளையும் சிறுமலை வாழைப்பழமும் அவ்வப்போது பயன்படுத்தப்படுகிறது. விதை நீக்கப்பட்ட பேரீச்சை இருபத்தைந்து கிலோ சேர்க்கும்போது பஞ்சாமிர்தத்துக்கான சுவை முக்கால்வாசி வந்துவிடுகிறது. கரும்புச் சர்க்கரை 288 கிலோ, ஏலக்காய் இவையெல்லாம் இடுபொருட்கள்.

இவற்றைக் கொண்டு ஒரு நாளைக்கு மட்டும் சராசரியாக பத்தாயிரம் டின் பஞ்சாமிர்தம் தயாரிக்கப்படுகிறது. ஒவ்வொன்றும் அரை கிலோ.

வருடத்துக்கு 14.5 கோடி வருமானம் கொடுக்கும் பஞ்சாமிர்தத் தயாரிப்பில் மட்டும் ஷிப்ட் கணக்கில் நூற்றுக்கும் மேற்பட்டோர் பணியாற்றுகின்றனர். 24 மணிநேரமும் புரொடக்ஷன் நடக்கும் இத்தொழிலில் கசப்பான சில தகவல்களையும் சொல்கின்றனர்.

இப்போது தேவஸ்தானம், பஞ்சாமிர்த கலெக்ஷனில் காட்டும் சில முன்னேற்பாடுகளை பழநி வளர்ச்சியிலும் காட்ட வேண்டும். தேவஸ்தான விற்பனை பல மடங்கு அதிகமாக இருப்பதால் குறைந்த விலைக்கு பஞ்சாமிர்தத்தைக் கொடுக்க முடிகிறது. இதனால் பஞ்சாமிர்த விற்பனையில் இருக்கும் குறு உற்பத்தியாளர்கள் பாதிக்கப்படுகின்றனர். ''தேவஸ்தானம் தரக்கட்டுப்பாட்டை நிர்ணயம் செய்து எங்களிடம் கொள்முதல் செய்யலாம்'' என்கின்றனர் சில குறு உற்பத்தியாளர்கள். ○

கல்கியின் நெடுநாள் வாசகர் சாம்ப சிவம் வங்கிகள் தொடர்பான ஆதங்கத்தை ஒரு கடிதத்தின் வாயிலாகக் கொட்டியிருந் தார். அதன் சாரம் இது.

''நானும் என் மனைவியும் நாட்டுடை மையாக்கப்பட்ட ஒரு வங்கி யில் ஆர்.டி. அக்கௌண்ட் தொடங்கினோம். பாஸ் புக் கொடுக்கும்போது நாங்கள் சொன்னபடி நாமினி பெயரை வங்கி அதிகாரி அதில் போடவில்லை. கேட்டதற்கு 'இருவரில் ஒருவர் அல்லது இருப்பவர், (Either or Survivor) கணக்குதானே' என்று பதில் வந்தது.

'கோர் பேங்க்கிங்' ஆரம்பித்ததிலிருந்து நாமினிக்கு அந்த வங்கி யில் கணக்கு இல்லை யென்றால், நாமினி தொடர்பான சான்றுகள் இருந்தால்தான் சேர்க்க முடியும் என்று பதில் வந்தது. ரேஷன் கார்டு காப்பி கொடுத்து என் மகன் பெயரைப் பதிவு செய்தார்கள். (இதை அவர்கள் கணக்கு தொடங்கும்போது சொல்லியிருக்க வேண் டும்).



வேறொரு கிளையிலிருந்த ஃபிக்ஸட் டெபாசிட்டுகளின் கதி வேறொரு குடைச் சல்! அங்கும் நாமினி பெயர் பதிவு செய் யப்படவில்லை. விண்ணப்பத்தில் குறிப் பிட்டிருப்பதாகச் சொல்லியும் அதையெல் லாம் தேட நேரமாகும் என்று வேறு இரண்டு ஃபாரங்களைக் கொடுத்து நாமினி யைச் சேர்க்கச் சொன்னார்கள்.

பணம் போட்டவர்கள் காலமானால் நாமினி இல்லாவிட்டால் வாரிசுகள் நாய் படும்பாடு படவேண்டும். அப்படியிருக்க வங்கிகள் இப்படி நடந்து கொள்ளலாமா?''

கூடாதுதான். 'நாமினி' தொடர்பான இத்தகைய குழப்பநிலை ஏன்? வங்கி களில் டெபாசிட் செய்பவர்கள் தங்கள் வாரிசுகள் நியமனம் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டியது என்ன? கேள்விகளு டன் தேசியமயமாக்கப்பட்ட சில வங்கி களின் பிரதிநிதிகளைத் தொடர்புகொண் டோம்.

''வங்கி விதிகள் (திருத்த) சட்டத்தின் 45 ZA-விலிருந்து 45 ZF வரை உள்ள பிரிவுகள் நாமினேஷன் தொடர்பான விவரங்களை வரையறுக்கின்றன.

டெபாசிட் கணக்கு, முக்கியப் பத்திரங் களைப் பாதுகாப்புக்காக வைக்கும் (Safe custody) கணக்கு மற்றும் பாதுகாப்புப் பெட் டகக் கணக்கு (safe deposit vault) ஆகிய வற்றுக்கு 'நாமினி'க்களை நியமிக்கும் உரிமை வாடிக்கையாளருக்கு உண்டு.

நாமினியாக யாரையாவது நியமிக்க வேண்டும் என்பது கட்டாயம் அல்ல. ஆனால், அப்படித் தெரிவிப்பது பல சிக்கல் களை வருங்காலத்தில் தவிர்க்க உதவும்.

பொதுவாக நெருங்கிய உறவினர்களைத் தான் நாமினியாகப் பலரும் குறிப்பிடு

கிறார்கள். ஆனால், யாரை வேண்டுமானாலும் நாமினியாக நியமிக்கலாம். வாடிக்கையாளர் இறந்து விட்டால் டெபாசிட் தொகையைப் பெறுவதில் நாமினி, சட்டப்படியான வாரிசுதாரர் ஆகிய இருவரும் போட்டியிட்டால் நாமினியிடம் அந்தத் தொகையை வங்கி அளிக்கவேண்டும். அப்போதுதான் வங்கிக்குச் சட்டத்தின் பாதுகாப்பு கிடைக்கும்.

வாடிக்கையாளர் இறந்துவிட, நாமினி அந்த டெபாசிட் தொகையைப் பெற முன் வந்தால், வாடிக்கையாளர் இறந்ததற்கான ஆதாரம் (இறப்புச் சான்றிதழ்) மற்றும் தமது அடையாளத்துக்கான ஆதாரம் (புகைப் படம் மற்றும் விலாசத்தோடு கூடியவை

# நாமினி நாக்-அவுட்

ஓட்டுனர் லைசென்ஸ், பாஸ்போர்ட் போன்றவை) ஆகியவற்றை வங்கிக்கு அளிக்கவேண்டும். சில வங்கிகள் தங்களுக்குத் தெரிந்த யாராவது, நாமினியை அடையாளம் காட்டவேண்டும் என்று எதிர்பார்க்கலாம். அரசு அதிகாரி அல்லது சமூகத்தின் மதிப்புமிக்க பதவியில் உள்ளவர் என்று வங்கி கருதும் வேறு யாராவது நாமினியின் அடையாளத்தை எழுத்து மூலம் தரவேண்டும்.

முன்பெல்லாம் பல வங்கிகளில் நாமினேஷனுக்காக தனியான படிவம் கொடுப்பார்கள். இது இரண்டாக இருக்கும். இரண்டிலும் வாடிக்கையாளர் மற்றும் வங்கி அதிகாரியின் கையெழுத்து இருக்கும். ஒன்று வங்கியிடமும், அதன் பிரதி வாடிக்கையாளரிடமும் இருக்கும்.

இப்போது பல வங்கிகளில் அக்கௌண்ட் தொடங்குவதற்கான படிவம் அனைத்து விவரங்களும் அடங்கியதாக (Comprehensive) இருக்கிறது. ஆனாலும்கூட அதில் நாமினேஷன் தொடர்பாக ஒரு தனிப் பகுதி (Tear off slip) இருக்க வாய்ப்புண்டு. இந்தப் பகுதியை வங்கி உங்களுக்கு (தனது முத்திரை மற்றும் தனது அதிகாரியின் கையெழுத்தோடு) அளிக்கவேண்டும்.

பொதுவாக பாஸ் புக்கில் நாமினி பெயரைக் குறிப்பிடுவதில்லை. இதன் காரணமாக வாடிக்கையாளருக்குப் பிரச்னை வரக்கூடாதே என்பதுதான் நோக்கம். உதாரணமாக ஒருவருக்கு மூன்று மகன்கள் இருந்து ஒருவரை மட்டும் நாமினியாகக் குறிப்பிட்டிருந்தால், பாஸ் புக் மூலம் இந்த விவரம் கசிந்து அந்தக் குடும்பத்தில் கருத்து வேறுபாடு வரக்கூடும்.

ஆனால் கல்கி வாசகர் கூறியதுபோல் பாஸ் புக்கில் நாமினேஷன் இல்லாமல் போனால் (இந்த விவரம் வங்கியிலும் பதிவுசெய்யப்படாவிட்டால்) வருங்காலத்தில் சிக்கல் ஏற்படலாம். எனவே வங்கிக் கணக்கைத் தொடங்கும்போதே 'பாஸ் புக்கில் (அல்லது டெபாசிட் சர்டிபிகேட்டில்) நாமினியின் பெயர் குறிக்கப்பட வேண்டும்' என்று எழுத்துபூர்வமாக ஒரு கடிதத்தைக் கொடுத்துவிட்டால், வங்கி அதன்படி செய்துதான் ஆகவேண்டும்.

நாமினேஷன் தொடர்பாக சிலருக்கு எழக்கூடிய வேறு சில குழப்பங்களுக்கான விடைகள் இதோ. ஒருமுறை ஒருவரை நாமினியாகப் போட்டுவிட்டால் அதை மாற்ற முடியாது என்பதில்லை. இடையே தாராளமாக அந்த நாமினேஷனை கேன்சல் செய்யலாம். அல்லது அவருக்குப் பதிலாக வேறொருவரை நாமினியாக்கலாம். (மறக்காமல் இந்த மாறுதல்களை வங்கியிடமிருந்து எழுத்துபூர்வமாக உறுதி செய்து கொள்ளுங்கள்).''



● குலசேகரன், சென்னை

***சமீபத்தில் வெளியான 'பத்மஸ்ரீ' விருதுகள் பற்றி?***

எனக்கே கிடைத்த சந்தோஷத்தை, மிஸஸ்.ஒய்.ஜி.பி. அவர்களுக்குக் கிடைத்ததில் அடைந்தேன். மரியாதைக்குரிய அந்த 'அவ்வைஜி' அவர்களுக்குப் பிறகு, குழந்தைகள் கல்விக்காக வாழ்கின்றவர் 'இவ்ஒய்.ஜி.பி' இவர்கள். 'பத்மா சேஷாத்ரி' பள்ளிக்கூடம் இவரால் 'பத்மஸ்ரீ சேஷாத்ரி' ஆகியது. 'இளமையில் கல்' என்பார்கள். எண்பது வயது முதுமையிலும் இவர் 'கொன்னக்கோல் வித்வான் வி.வி.எஸ். மணிய'னிடம் சொற்கட்டுக்களைக் கற்றுக் கொண்டார். இவர் ஒரு முதுநிலைப் பல்கலைக்கழகம். கல்வி தவிர சங்கீதம், நாடகம், நாட்டியம் என பல துறைகளையும் அலசவல்ல சகலகலா வல்லி. மெட்ராஸுக்குக் கிடைத்த 'மதர் கல்வி-தெரெஸா'!

● வையாபுரி, விழுப்புரம்

***காதல், கல்யாணம், கடவுள்... ஒப்பிடுங்கள் பார்க்கலாம்?***

காதல் கும்பிடப் போன கடவுள்; கல்யாணம், குறுக்கே வந்த கடவுள்!

● அனன்யா, திருச்சி

***சினிமா உலகை 'கனவுத் தொழிற்சாலை' என்பது போல, நாடக உலகை என்னவென்று சொல்லலாம்?***

கனவு நனவாக கற்றுக்கொடுக்கும் கல்விச்சாலை.!

● ச.ராஜசேகர், செய்யாறு

***வாழ்க்கை ஒரு வெங்காயம்; அதை உரிக்கும்போது கண்ணீர் வரும். அது போல காதல் ஒரு...?***

வேறு யாரையோ மணக்கும்போதும், பழைய காதலை நினைவுக்குக் கொண்டு வந்து மணக்கும் பெருங்காயம்.!

● என்.கோமதி, நெல்லை

***நாம் பிறக்கும்போதே நமது நெற்றியில் காலாவதித் தேதியோடு பிறந்திருந்தால்?***

இப்பவும் நெற்றியில் காலாவதித் தேதியோடுதான் பிறக்கிறோம். நம் கண்ணுக்கு அது தெரியாது. காலன் கண்ணுக்குத் தெரியும். காலன் கண்ணுக்கு அந்தத் தேதி தெரியாமல் மறைக்கத்தான் நம் முன்னோர்கள் நம்மை நெற்றியில் பட்டையாக திருநீறு, குங்குமம், நாமம், சந்தனம் இட்டுக் கொள்ளச் சொன்

# நாலாயிரங்காலத்துக் காதல்!

னார்கள். காலாவதியா இல்லை காலா வசதியா எனத் தீர்மானிக்க வேண்டியது உங்கள் தலையெழுத்து!

● அ.மகேஸ்வரி, மதுரை

**தெய்வ பக்திக்கும், தேசபக்திக்கும் என்ன வித்தியாசம்?**

தெய்வ பக்தி ஆத்திகம்; தேச பக்தி தாய்நாட்டிகம்!

● எம்.மிக்கேல்ராஜ், சாத்தூர்

**பாத்திரம் அறிந்து பிச்சை இடு என்று சொல்கிறார்களே. அதன் விளக்கம் என்ன?**

பிச்சை எடுக்க வந்த கதாபாத்திரம் கதா நாயகனா இல்லை வில்லனா என்று அறிந்து பிச்சை இடவேண்டும். சன்னியாசி வேடத்தில் வந்த ராவண வில்லனுக்குப் பிச்சை இட சீதை, லட்சுமணன் போட்ட கோட்டைத் தாண்டியதால் எவ்வளவு அல்லலுற்றாள்!

● அ.யாழினி பார்வதம், சென்னை

**கல்யாணம் ஆயிரம் காலத்துப் பயிர் என்றால்... காதல்?**

திவ்யப் பிரபந்த நாலாயிரங் காலத்து நாச்சியார், கண்ணனைக் காதலித்த ஆண்டாள்!

● என்.ஏ.லதா, பழனி

**செ, மு, கொ, பெ, டெ இதில் கிரேஸிக்குப் பிடித்த ஊர் எது?**

எனக்குப் பிடித்த ஊரின் பெயர் 'மை'யில் தொடங்கி 'ர்'ல் முடியும், நடுவில் 'லாப்பூ' என்று வரும். எப்படி கேள்வி மாதிரியே பதிலையும் சூசகமாகச் சொன்னேன் பார்த்தீங்களா! ●



# புஜ்ஜி

**ரிஷபன்**

ஒரு கதகதப்பான காற்று தழுவிக்கொண்டு போன பிரமை.

பனி இறங்கிக்கொண்டிருந்தது. பைக் ஓட்டுவதில் சிரமம் தெரிந்தது. ஆனாலும் போக வேண்டும்.

நால்வழிப் பாதை வேலைகள் மும்முரமாய் நடந்துகொண்டிருந்தன. மேம்பாலத்துக்காக உயர்த்திய மண் மேட்டில்தான் இப்போது இருபுற வாகனங்களும் போய்க் கொண்டிருந்தன. கீழ்ப்பகுதியில் போக்குவரத்து இல்லை. பழைய சாலையைப் பெயர்த்துப் போட்டிருந்தார்கள். சட்டென்று வண்டிகள் நின்றுவிட்டன. ஹார்ன்கள் அலறி அதுவும் ஓய்ந்து விட்டன. போகவும் இல்லை. வரவும் இல்லை.

என்ஜினை அணைத்துவிட்டு ஹெல்மெட்டைக் கழற்றி முன்னால் வைத்தான். கைபேசி சிணுங்கியது. குறுஞ்செய்தி வந்திருக்கும் அடையாளம்.

'ஹாய் புஜ்ஜி... கவிதை நல்லா இருக்குப்பா'

தமிங்கிலத்தில் செய்தி. என்ன கவிதை அனுப்பினேன்? யோசித்தான். ஓ..

பெயரியல் நிபுணர்
பெயர் மாற்றச் சொன்னார்...
மறுத்தேன்..
'புஜ்ஜி' என்றாய்.
மகிழ்கிறேன்!

'வழியில மாட்டிக்கிட்டேன்டா... டிராஃபிக் ஜாம்.'

'ப்ரெட் இல்லியா?'

'கடிக்காதடா செல்லம்... பசி கொல்லுது...'

'பக்கத்துல மக்கடை



இல்லியா?'

'இந்தப் பக்கம் மண் மேடு. அந்தப் பக்கம் பொக்லைன்... எதைத் திங்கட்டும்?'

'கோவமாப்பா?'

'ஊஹூம்... சந்தோஷம்.'

'நான் இப்ப என்ன பண்ணட்டும். டிஃபன் எடுத்துக்கிட்டு வரவா?'

'நடக்கிறதைப் பேசுடா'

'கால் பண்ணவா?'

'ம்ம்... சுத்தி ஒரே சத்தம்... அவனவன் பொறுமை போய் ஹார்ன் அடிச்சே கொல்றான்'

'ரொம்ப பசிக்குதாப்பா?'

'சட்டையைத் திங்கலாமான்னு யோசிக்கிறேன்.'

'ப்ளூல செக் வச்ச ஷர்ட்தானே?'

'ம்'

'அது எனக்குப் பிடிச்ச ஷர்ட்பா?'

'ம்'

'நீ 'ம்' கொட்டறது நல்லா இருக்குப்பா'

'அடிப்பாவி... ரசனையா?'

'நிஜமாவே.. காதுக்குள்ள 'ம்' சொல்ற பீலிங்'

'ம்'

'வேணாம்பா.. அப்புறம் வண்டி புடிச்சு வந்திருவேன்'

'நீ 'ம்' சொல்லு.'

'எதுக்கு?'

'உன்னோட 'ம்' புடிச்சுப் போய்த்தானே உன்னை லவ் பண்ணேன்.'

'பொய்யி'

'போடி... பிகு பண்ணாத...'

'கோவமாப்பா?'

'.........'

'என்ன பண்றே... டிராஃபிக் கிளியர் ஆயிருச்சா?'

'இன்னும் ரெண்டு நாள் ஆகும், கிளியர் ஆக...'

'ம்'



'ப்ளீஸ்டா... ஒன்ஸ் அகெய்ன்'

'ம்'

'கொல்றடி... அய்யோ... கடவுளே... என் வண்டியை மட்டும் அப்படியே தூக்கி வெளியே விட்டுடேன்'

'ம் சொன்னா என்ன பண்ணுது உனக்கு?'

'புரியாத மாதிரி கேட்காதே...'

'உன்னைப் பார்த்தா இன்னும் வளரவே இல்லாத சின்னப் புள்ளை மாதிரியே இருக்க'

'என்ன பண்ற...?'



"செல்லை வச்சு பைத்தியம் மாதிரி மெசேஜ் அடிச்சுக்கிட்டே இருந்தா..."

'சின்ன புள்ள'

'ஓ... டைப் பண்ண லேட்டா... கதை மாதிரி பெருசா அடிக்காதே... சின்னச் சின்னதா அனுப்பு'

'நீயும்தான் கதை அடிக்கறே'

'இல்லடா.. நிஜமாவே... ஐ லவ் யூ'

'பொய்யி'

'நம்பாட்டி போ'

'ம்'

'மறுபடியுமா... என்னால முடியலடா'

'இப்ப எப்படி இருக்கு...?'

'ஜிவ்வுனு இருக்கு'

'ச்சி... டிராஃபிக் ஜாம்'

'ம்ஹூம்'

'சீக்கிரம் வாப்பா'

'நானா பிடிவாதம் பிடிக்கிறேன்?'

'ஹார்ன் சத்தம் கேட்குது'

'ஆங்... கொஞ்சம் நகருது'

'வந்துரு... வந்துரு...'

'க்ளியர் ஆயிரும் போல.. அப்புறம் மெசேஜ் பண்றேன்டா'

**ச**ரசரவென வழி கிடைத்த ஜோரில் வாகனங்கள் விரைந்தன. அவனது பைக்கும்...

அரைமணியில் வீட்டுக்கு வந்து விட்டான். அழைப்பு மணி அடிப்பதற்குள் அவளே கதவைத் திறந்துவிட்டாள். டைனிங் டேபிள் மீது சுடச்சுட காப்பி.

'புஜ்ஜி...'

அவள் கையில் கைபேசி. ஏதோ மெசேஜ் அடித்தாள்.

'நல்லா பேசிக்கிட்டு இருந்தோம்ல...'

அருகில் இழுத்து அவள் கண்களைப் பார்த்தபோது, சற்றே கலங்கிய விழிகள். உதட்டால் கண்களை ஒற்றினான். உள்ளிருந்து அம்மா வந்தாள்.

''தவிச்சுப் போயிட்டாடா.. அவ கவலையை என்கிட்ட சொல்லவும் முடியல... செல்லை வச்சு பைத்தியம் மாதிரி மெசேஜ் அடிச்சுக்கிட்டே இருந்தா... அவளுக்குப் பேச வரலைங்கிற குறை இன்னைக்குத் தான் எனக்கே கஷ்டமா இருந்ததுடா.''

இங்கிதம் புரிந்தவளாய் அம்மா நகர்ந்து போக... உதட்டசைவில் 'புஜ்ஜி' என்று புரிந்துகொண்டு...

**ஒ**ரு கதகதப்பான காற்று தழுவிக் கொண்டு போன பிரமை அவனுக்கு. ●

# விவசாயிகளின் ஏ.டி.எம்.!

திண்டுக்கல் மாவட்டத்துல மிகப் பெரிய காய்கறி மார்க்கெட், ஒட்டன்சத்திரம் மார்க்கெட். பழநி போற ரோட்டுல சாலையோரமா நடந்து வந்திருக்கு பல வருஷமா. 1975ல்தான் ஒரு ஒழுங்கு பண்ணி எல்லாத்தையும் ஒரே இடத்துல கொண்டாந்து சேர்த்து, 'காந்தி மார்க்கெட்' என்கிற பேர்ல பெரிய சந்தையா மாத்தியிருக்காங்க.

அதுலேருந்து ஒட்டன்சத்திரத்தைச் சுற்றியுள்ள நூத்துக்கணக்கான கிராமங்களின் சாகுபடி விவசாயிகளுக்கு, இது சூப்பர் மார்க்கெட். நாலரை ஏக்கர் பரப்பளவுல விரிஞ்சு கிடக்கு. லாரிங்க, வேனுங்க எல்லாம் வந்து நின்னு சரக்கு ஏத்தி இறக்க, நல்ல விசாலமான இடம். எந்த நேரம் பார்த்தாலும் பத்துப் பதினைஞ்சு லாரிகள்ல சரக்கு வந்து இறங்கவும், ஏறவுமா இருக்கு.

''சுத்துவட்டார இருநூறு முந்நூறு கிராமங்கள்ல சாகுபடி பண்ற விவசாயிகள், தங்களோட காய்கறிகளை இங்கேதான் கொண்டாந்து கொட்றாங்க. அந்த விவசாயிகள் அனைவரும் நேரடியா இதனால பயன் அடையறாங்க. அன்னன்னைக்கு அவங்களுக்குப் பணம் கெடைச்சுடுது. காய்கறி விவசாயிகளோட ஏ.டி.எம். இந்த ஒட்டன்சத்திரம் மார்க்கெட். அந்த அளவுக்கு நம்பி அவங்க காய்கறி கொண்டு வர்றாங்க.



ஆறுமுகம்

மொத்தத்துல நூத்து முப்பது கமிஷன் மண்டி கடைகள் இருக்கு. கேரட், பீட்ரூட் தவிர மத்த எல்லாக் காய்கறிகளும் வந்து குவியுது. ஒருநாளைக்கு சராசரி ஐந்நூறு டன் காய்கறிகளுக்குக் குறையாம வந்து போகுது. இதுல எழுபத்தைஞ்சு சதவிகிதம் காய்கறிகள் அப்படியே கேரளாவுக்குப் போகுது. அதனால தான் இந்தச் சந்தைக்கு ரொம்ப மவுசு. வந்த காய்கறி எதுவும் தேங்கி நிற்காது. மூட்டைகள் இடம் மாறும். கைக்குப் பணம் வந்துடும். சாகுபடி விவசாயிகளுக்கு இதைவிட வேறென்ன வேணும்!'' என்கிறார் ஒட்டன்சத்திரம் காந்தி மார்க்கெட் காய்கறி கமிஷன் மண்டி சங்கச் செயலாளர் ஆறுமுகம்.





அம்பாள் ஸ்ரீபுரத்தில் இருக்கிறாள். அந்த ஸ்ரீபுரத்துக்குள் யார் போக முடியும்?

நவாவரணம் என்போமே, அந்த ஒன்பது கோட்டைகள் ஸ்ரீபுரத்தைச் சுற்றியும் அமைந்துள்ளன. இந்தக் கோட்டைகளைத் தாண்டிப் போவது சாதாரணமில்லை. தேவேந்திரனாலும் அவனைச் சேர்ந்தவர்களாலும் கூடப் போக முடியவில்லை! ஏனென்றால், அவர்களிடம் செல்வம் இருந்தது; ஆனால், 'அம்பாளை ஆராதிக்க வேண்டும்' என்கிற பக்தி இல்லவே இல்லை!

**பாடலீகுஸுமப்ரியா** - பாதிரி மலர்களை ப்ரியமாக ஏற்பவள்

பாதிரிப்பூ. அது வெளிர் சிவப்பும் வெள்ளையும் சேர்ந்ததாக இருக்கக்கூடியது. இந்த பாதிரிப் பூவும் மரங்களும் நிறைய காணப்பட்டதனால்தான் கடலூருக்குத் திருப்பாதிரிப்புலியூர் என்று பெயர் வந்தது. வடக்கே இருக்கக்கூடிய பாட்னாவும் முழுதும் பாதிரி (பாடலி) வனமாக இருந்தது. அதனால்தான் பாடலிபுத்ரம் என்று வரலாற்றுப் பெயர் அவ்விடத்துக்கு. இந்தப் பாதிரி மலர்களால் மகிழ்ச்சி - ப்ரீதி - அடையக் கூடியவள் **பாடலீகுஸுமப்ரியா.**

**மகதி** - எல்லாவற்றுக்கும் மேம்பட்டவளாக, மிகப் பெரியவளாக இருக்கக்கூடியவள்.

# குணம் கடந்த குன்று!

என்று இதற்குப் பொருள். பரம்பொருளாக இருக்கக்கூடிய சிவன் வில்வ தளத்திலேயும், அம்பாள் பாடலீ புஷ்பத்திலேயும் இருப்பதாகக் கணக்கு. வில்வ தளத்துக்கு ஸ்ரீ தளம் என்று ஒரு பெயர் உண்டு. காரணம், மஹாலக்ஷ்மி நித்ய வாஸம் செய்கிற இடங்களுள் ஒன்று வில்வ தளம். அது மஹாலக்ஷ்மிக்கு ப்ரீதியானது; சிவபெருமானுக்கும் ப்ரீதியானது. அம்பாளுக்கு மிகவும் பிடித்தது

## மேருவில் வாசம்

**மேரு நிலையா** - மேருவில் இருக்கக் கூடியவள். இதற்கு என்ன விளக்கம் என்பதை அப்புறம் பார்ப்போம். இப்போதைக்கு, மேரு மலையில் - அவளுடைய ஸ்ரீபுரத்தின் உச்சியில் இருப்பதாகக் கணக்கு. அதனால்தான் சாதாரணமாக எங்கேயாவது அம்பாளை ஆவாஹனம் பண்ணுவதானால்கூட, மேரு பீடம் அமைத்து ஆவாஹனம் செய்வதுண்டு. மேருவின் உச்சியில் இருப்பவள்

17

ஸ்ரீ லலிதா

நான்காம் பாகம்

சுதா சேஷய்யன்

மேரு நிலையா.

ஸ்ரீ சக்கர வடிவத்தின் மத்தியில் அம்பாள் உறைகிறாள் என்று பார்த்தோம். அந்த ஸ்ரீ சக்கரம் இரு பரிமாண (டு டைமென்ஷனல்) வடிவம் என்றால், மேரு என்பது, அதே ஸ்ரீ சக்கரத்தின் முப்பரிமாண (த்ரீ டைமென்ஷனல்) வடிவம்.

## மலரிடம் நேசம்

**மந்தார குஸுமப்ரியா**

மந்தார மலரானது தேவலோகத்து மலர் என்று கணக்கு. தேவலோகத்தில் மட்டுமே இருக்கக்கூடிய சில மரங்கள் உண்டு. அவற்றுள் ஒன்று மந்தார மரம். அதன் மலர் அம்பாளுக்கு ப்ரியமானது.

பூலோகத்தில் மந்தார புஷ்பம் உண்டா என்றால், சில நிகண்டுகளில் வெள்ளெருக்க மலர் இருக்கிறதே, அதைத்தான் மந்தாரம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இது சிவபெருமானுக்கு மிகவும் ப்ரீதியானது. வெள்ளெருக்கஞ்சடைமுடியான் என்றே அவருக்குப் பெயர். தன்னுடைய ஜடா முடியில் வெள்ளெருக்கம் மலர்களைச் சூடிக்கொண்டவராக இருப்பவர். அவருக்குப் பிடித்த மலர்கள் அம்பாளுக்கும் பிடிக்கும் என்பதால் **மந்தார குஸுமப்ரியா**. வெள்ளெருக்கு மலர்களில் ப்ரீதி கொண்டவள்.

**வீராராத்யா** - வீரர்களால் ஆராதிக்கப்படக்கூடியவள்.

**விராட்ரூபா** - எல்லாவற்றையும் தன்னுள்ளே அடக்கிக்கொண்ட விச்வ ரூபமாக இருக்கக் கூடியவள்.

**விரஜா** - எந்தவிதமான பாபமோ துக்கமோ இல்லாதவள்.

**விச்வதோமுகி** - பல முகங்களைத் தரித்தவள். இந்த விச்வத்தைப் பல விதமாகப் பார்க்கக்கூடியவள், பலவித நிலைகளில் பார்க்கக்கூடியவள் **விச்வதோமுகி**.

**பிரத்யக்ரூபா** - நாம் உள்முகமாகப் பார்க்கிற போது தன்னுடைய ரூபத்தை நமக்கு வெளிப்படுத்துகிறவள் **பிரத்யக்ரூபா**. இது ஏற்கெனவே



**சிவனுக்குப் பிடித்த மலர்கள் அம்பாளுக்கும் பிடிக்கும்...**

இன்னொரு திருநாமத்தில் வந்தது - **பிரத்யக்சிதி** என்று வந்தது.

சித் ஸ்வரூபமாக அம்பிகை இருப்பதால், உள்முகமாகப் பார்க்கிறபோது பிரத்யக்ஷமாகத் தெரிகிறாள். எனவே **பிரத்யக்ரூபாவாக** இருக்கிறாள்.

**பராகாசா** - தகராகாசமாக இருக்கக்கூடியவள் - பராகாசமாக, பெரிய ஆகாசமாக, பரமாத்ம ஆகாசமாக இருக்கக்கூடியவள்.

**பிராணதா** - பிராணனைத் தரக்கூடியவள்; நமது பிராணனாகவே இருக்கக்கூடியவள். **பிராண ரூபிணி** - பிராணத்தின் வடிவமாகவும் இருப்பவள்.

**மார்த்தாண்டபைரவாராத்யா** - மார்த்தாண்ட பைரவரால் ஆராதிக்கப்படக்

கூடியவள். மார்த்தாண்ட பைரவர் என்பவர் சிவனுடைய அம்சம். அந்த தேவரால் வணங்கப்படுகிறவள் அம்பாள்.

## ராஜ்ய பரிவாரங்கள்

**மந்த்ரிணீன்யஸ்த ராஜ்யதூ:** மந்திரிணியிடம் தனது ராஜ்ஜியத்தைக் கொடுத்து, அவள் அதைப் பார்த்துக்கொண்டு பரிபாலிக்கும்படி செய்பவள். இதனையும் நாம் ஏற்கெனவே பார்த்திருக்கிறோம். பண்டாசுர வதத்துக்குப் புறப்பட்டுப் போகையில் ஸ்ரீலலிதாம்பிகையுடன் மந்த்ரிணீயும் அச்வாரூடாவும் வருகிறார்கள். மந்த்ரிணிக்கு ஷ்யாமளை என்றொரு பெயர் உண்டு. சங்கீத ஷ்யாமளை, ராஜ ஷ்யாமளை என்றும் அழைக்கப்படுகிறாள். இவளிடம்தான் தனது ராஜரீக பொறுப்புகளையெல்லாம் கொடுத்திருக்கிறாள் அம்பாள். அச்வாரூடா சைனியத்தைப் பார்த்துக்கொள்கிறாள். இரண்டு பேரும் அம்பாள் அருகிலேயே இருந்து பொறுப்புகளை நிர்வகிக்கிறார்கள்.

**வில்வ தளத்துக்கு ஸ்ரீ தளம் என்று ஒரு பெயர் உண்டு**

**த்ரிபுரேசி** - முப்புரங்களின் ஈசுவரியாக இருக்கக்கூடியவள்.

**ஜெயத்ஸேனா** - வெற்றியுடன் கூடிய சேனைகளை உடையவள்.

**மந்த்ரிணீ**யில் ஆரம்பித்து, திரும்பவும் ஒரு தொகுப்பாக நாமங்கள் அமைந்துள்ளதைப் பார்க்கலாம். அடுத்தடுத்து வருபவை ராஜ்ய பரிபாலனத்தைப் பற்றிச் சொல்லக் கூடிய திருநாமங்கள் என்பதை நாம் கவனிக்க வேண்டும்.

## துரிய நிலை

**நிஸ்த்ரைகுண்யா** - ராஜஸ, தாமஸ, ஸத்வம் என்னும் மூன்று குணங்களும் இல்லை; அவற்றைத் தாண்டி இருக்கக் கூடியவள். முக்குணங்களுள் எதுவொன்று இருந்தாலும் அது ஒருவிதமான கட்டுப்பாடுதான்; விருப்போ வெறுப்போ அமைந்து போகும். விருப்பு - வெறுப்புகளைத் தாண்டிய நிலைமை என்று சொல்கிறபோது, அது வெறுப்பு அற்ற நிலை என்பது மட்டும் அல்ல; எதன் மீதும் ஒரு விருப்பம் இல்லாத நிலைமையும் கூட! முக்குணங்களில் எது தூக்கலாக அமையப் பெறுகிறதோ அதையொட்டியே ஒரு மனிதரின் குண இயல்பு அமையும். அதனையடியொற்றி விருப்பு - வெறுப்பும் விளையும்.

ஆனால் முக்குணங்களுமே இல்லாத நிலைமை இருக்கிறதே, அதுதான் துரிய நிலைமை. **நிஸ்த்ரைகுண்யா**வான அம்பிகை இந்த துரிய நிலைமையில் துலங்குகிறாள்.

**பரா அபரா** - ரொம்ப அழகான திருநாமம் இது. **பரா**வும் அவளே; **அபரா**வும் அவளே; **பரா அபரா**வும் அவளே! இந்த மூன்றின் விசேஷம் என்ன..?

*(வளரும்)*

● எம்.சம்பத்,
வேலாயுதம்பாளையம்

? ''அழகிரியும் நானும் இரட்டைக் குழல் துப்பாக்கி போல பணியாற்றுவோம்,'' என ஸ்டாலின் பேசியுள்ளாரே?

! சபாஷ்! லஞ்சம், ஊழல், அராஜகம், முறைகேடுகள் இனி டபுள் வேகத்தில் ஒழிந்து போகும் பாருங்க! இரட்டை சபாஷ்!

● ஜெ.துரைராஜ், சென்னை

? மிருதங்க வித்வான் உமையாள்புரம் சிவராமனுக்கு பத்ம விபூஷன் கிடைத்திருப்பது பற்றி..?

! ஆயிரக்கணக்கான கச்சேரிகளுக்கு அவரது வாசிப்பு பூஷணமாக (நகையலங்காரம்) அமைந்து, அவற்றை ஒளிரச் செய்கிறது என்பது ஒருபுறமிருக்க, அவரது பாணியே இசை உலகுக்கு ஒரு பூஷணம்!

● கு.கணேசன், பனங்கோட்டூர்

? திவாலாகிவிட்டதாக தாமே ஒப்புக்கொண்டுள்ளவரும் ஸ்டேட் பாங்கில் 45 கோடி ரூபாய்வரை மோசடி செய்ததாக சி.பி.ஐ.யால் குற்றப்பத்திரிகை தாக்கல் செய்யப்பட்டுள்ளவருமான தொழிலதிபர் சந்த் சிங் சத்வாலுக்கு பத்ம பூஷண் அறிவிக்கப்பட்டது குறித்து..?

! இது போன்ற தவறுகள் நிகழாமல் கவனமாக இருக்கும்படி சில ஆண்டுகள் முன்பே அப்துல் கலாம், தாம் குடியரசுத் தலைவராக இருந்தபோது மத்திய அரசை எச்சரித்துள்ளார். அப்படியும் தவறு நடக்கிறது என்றால், காரணம், ஏதோ ஒரு விதத்தில் அரசியல் ஆதாயம் கிடைத்திருக்கும்; அல்லது அந்த எதிர்பார்ப்பு இருக்கும். நாடாளுமன்ற உறுப்பினர்களுள் 25 சதவிகிதம் பேர் குற்றச்சாட்டுக்கு உள்ளானவர்கள் என்கிறபோது, இது என்ன பிரமாதமான விஷயம்?





* பாஸ்பா மதிப்பு

● சி.ஆர்.நாகராஜன், பொள்ளாச்சி

? மத்திய அரசுக்கு இத்தாலிய மொழியில் கடிதம் எழுதுவேன் என்கிறாரே மோடி?

! அவருடைய நக்கலைப் பொருட்படுத்தாமல் இருக்கலாம்; அல்லது அதற்கு இடமின்றிப் போக (விலைவாசி குறைய) நடவடிக்கை எடுக்கலாம்... இரண்டையும் விடுத்து, காங்கிரஸ் அவரை எதிர்த்து கண்டனத் தீர்மானம் போடுவதென்பது, நமுத்த பிஸ்கெட்டை டீயில் நனைக்கிற வேலை!



* எதிர்பார்த்த அறிவிப்பு

# வட்டவடிவில்

## நீங்கள் கேட்டவை - தராசு



• இசையுலக பூரணம்



• பூட்டாத பேச்சு!



• மெய்யான கவலை...

● **என்.பாலகிருஷ்ணன், மதுரை**

? *''வாய்க்குப் பூட்டு போடு வதுதான் இறையாண்மையா?'' என சீமான் கேட்கிறாரே?*

! வாய் இருக்கிறது என்பதற்காக எதை வேண்டுமானாலும் பேசு வேன் என்பது பேச்சுரிமை அல்ல... பொறுப்பற்ற பேச்சும் செயல்பாடும் இறையாண் மையை ஈர்க்கவே செய்யும்.

● **அ.சுஹைல் ரஹ்மான், திருச்சி - 21**

? *இந்தியாவை பாதிக்கும் நடவடிக்கையை எடுக்கப் போவதாக ஒபாமா அறிவித் திருப்பது பற்றி...?*

! அமெரிக்காவின் பொருளா தாரம் பாதிக்கப்பட்டு, வேலை இல்லாத் திண்டாட்டம் பெரு கும்போது, வெளிநாடு களுக்கு 'அவுட் ஸோர் ஸிங்' தருவதை அரசு கட்டுப்படுத்த முயற்சி செய்வது, புரிந்துகொள் ளக் கூடியதே. நாம் எதிர்பார்த்ததும்கூட!

● **ஆர்.ராஜதுரை, சீர்காழி**

? *''தமிழகத்தில் போதுமான அளவு குழந்தை எழுத்தாளர்கள் இல்லை,'' என்கிறாரே பேரா சிரியர் கு.ஞா?*

! குழந்தைகளுக்காக எழுதும் வயது முதிர்ந்த எழுத்தாளர்கள் அதிகம் இல்லை எனினும், குழந்தை எழுத்தாளர்கள் ஏரா ளம். ஒரு வருத்தம் என்ன வெனில், இவர்கள் வளர்ந்து பெரியவர்களானதும் எழுது வதை நிறுத்திவிடுகிறார்கள். பகுதி நேரப் பணியாகவேனும் அதைத் தொடர்வது, அவர் களுக்கும் இளைய சமுதாயத் துக்கும் நல்லது. எழுதுவதை பிறருக்கும் பயன்படும்படி

❒ ரூ.150/- பரிசு பெறுபவர்:
**B.கவிதா, சிதம்பரம்**
★ ரூ.75/- பரிசு பெறுபவர்:
**பாளை பசும்பொன், நெல்லை - 11**

● **பாளை பசும்பொன், நெல்லை-11** ★

? *சட்டசபையை ஏன் வட்ட வடிவில் அமைக்கிறார்கள்?*

! மெய்யான சட்டமன்றப் பணி இன்று பூஜ்ய மாகிவிட்டது என்பதை உணர்த்த அப்படி அமைந் திருப்பதாக எண்ணி விடாதீர்கள்! பூஜ்யத்துக்கு மதிப்பில்லை எனினும் அதற்கு முன்பு போடப் படும் எண்களால் அதன் மதிப்பு பல மடங்கு கூடும் என்பதை மறவாதீர்கள். மேலும், வட்ட வடிவ அமைப்பு சமத்துவத்தை உணர்த்தும்; ஒருவரை ஒருவர் பார்த்துக் கொள்வதும் சுலபம்.



★ நக்கல் நாயகன்

# சட்டசபை ஏன்..?

செய்வது இந்நாளில் எளிது!

● கே.வி.ராமன்,
சென்னை -73

? ஆஸ்திரேலியன் ஓபன் ஆட்டத்தில் ரோஜர் ஃபெடரர் வென்றதன்மூலம் பதினாறு கிராண்ட் ஸ்லாம் போட்டிகளில் வென்ற ஒரே வீரர் என்ற சாதனை படைத்துள்ளாரே?

! "ஃபெடரரைப் போல் இரைந்து கத்த முடியுமே தவிர, ஆட்டத்தில் ஒருநாளும் அவர் உயரத்தை என்னால் எட்ட முடியாது," என்று முர்ரே கூறியது ஃபெடரருக்குக் கிடைத்த கோப்பை, பணத்தைவிட முக்கியமானது. "வாழ்நாளின் மிகச் சிறந்த முயற்சியை மேற்கொள்ள இந்தப் பந்தயத்தில் முர்ரே என்னை நிர்ப்பந்தித்தார்," என்று ஃபெடரர் கூறியதோ, முர்ரேயின் தோல்வியினூடே அவருக்குக் கிடைத்த வெற்றி.



• ...வியப்பு!



• தாமத...

● வைகை வளவன், மதுரை

? "வன்னியர்களிடம் போதுமான அளவுக்கு ஒற்றுமை யில்லாததால்தான், கேவலம் தி.மு.க.வுடனும் அ.தி.மு.க.வுடனும் வலியச் சென்று கூட்டணி வைக்க வேண்டியிருக்கிறது," என ராமதாஸ் வேதனைப்பட்டிருக்கிறாரே?

! வேதனைப்பட்டும்கூட, "ஜாதியைக் கொண்டு அரசியல் செய்ய வேண்டாம்" என்ற நல்ல முடிவுக்கு அவரால் வர இயலவில்லை



• ...வேகத்தில்!



• படு...

பாருங்கள்! டாக்டர் தம் நோய்க்குத்தான் முதலில் சிகிச்சை செய்து கொள்ள வேண்டும்.

● B.கவிதா, சிதம்பரம்

? விலைவாசி உயர்வு, நடுத்தர மக்களைப் புரட்டிப் போட்டுவிட்டது; ஆனாலும், மக்கள் அரசை எதிர்த்துக் குரல் கொடுக்கத் தயக்கம் காட்டுவது சரியா...?

! பொழுது விடிந்தால் அடுத்தடுத்த காரியங்களில் அவசரம் அவசரமாக ஈடுபட்டுவரும் மக்களுக்கு பொதுநோக்கில் குரல் கொடுப்பதோ, எதிர்ப்பு காட்டுவதோ சாத்தியமல்ல. அதற்காகத்தான் மக்கள் பிரதிநிதிகளும் அரசியல் கட்சித் தலைவர்களும் இருக்கிறார்கள். அவர்கள்தான் மக்கள் சார்பில் ஓங்கிக் குரல் எழுப்பி தீர்வு காண வேண்டும்.

● இரா.சாந்தகுமார்,
வில்லிவாக்கம்

? தமக்கு அளிக்கப்பட்ட பத்மபூஷண் விருது அங்கீகாரமல்ல; பாராட்டுதான் என்கிறாரே இளையராஜா?

! ரஹ்மானுக்கு முன்னரே சாதித்தவர் ராஜா என்றபோதிலும், ஆஸ்கார் நாயகனை கௌரவிக்க விழித்துக்கொண்டவர்கள், ராஜாவை விட்டுவிட்டு அதைச் செய்ய முடியாது என்று உணர்ந்திருக்கிறார்கள். இதை ராஜாவும் உணர்ந்திருப்பதால் எழுந்துள்ளது அவரது 'சுருக்' வசனம்.

திண்டுக்கல் டூ திருச்சி ரோடு. அய்யலூர்லேருந்து ரெண்டு கி.மீ. தூரத்துல, வண்டி கருப்பண்ணசாமி கோயில். அதென்ன வண்டி? காரணம் இருக்கு.

பிரிட்டிஷ்காரங்க ஆட்சி செய்தபோது, ரயில் பாதை அமைச்சாங்க. அந்த ரயில் பாதையானது, கருப்பண்ணசாமி கோயிலை ஒட்டி அமைஞ்சது. அந்த இடத்துல ரயில் பாதை அமைக்கும்போதே, ஏகப்பட்ட இடைஞ்சல். நெறைய தடங்கல். ஒருவழியா பாதை போட்டு முடிஞ்சது. மொதல்ல வெள்ளோட்டமா ரயில் என்ஜினை விட்டுப் பார்த்தாங்க. திருச்சியிலேருந்து திண்டுக்கல் வரைக்கும். திருச்சியிலேர்ந்து கிளம்பி வந்த என்ஜின், அய்யலூருக்கு முன்னாடி இந்த எடத்துல தானாவே நின்னு போச்சு. என்ஜின்ல ஏதும் கோளாறானு டிரைவர் இறங்கி ஆராய்ஞ்சு பார்த்தாரு. கோளாறு ஒண்ணும் இல்ல. அப்புறம் மேல ஏறி என்ஜினை ஸ்டார்ட் செய்தார். ஸ்டார்ட் ஆகவே இல்லை.

பின்னாடியே, மோட்டார் ட்ராலி ஒண்ணுல பெரிய அதிகாரிங்க எல்லாரும் வந்துட்டாங்க. 'என்ஜின் ஏன் நின்னு போச்சு?'ன்னு விசாரிச்சாங்க. கூடியிருந்தவங்க ரயில் பாதை அமைச்சதுலேருந்து, நடந்த இடையூறெல்லாம் பட்டியல் போட்டாங்க. எல்லாம் கேட்டுக்கிட்ட அதிகாரிகள், பூஜைக்கு வேண்டிய சாமான்களை வாங்கி வரச் சொல்லி கருப்பண்ணசாமிக்கு அர்ச்சனை பண்ணாங்க. சாமி கும்பிட்டுட்டுப் போய், என்ஜினை ஸ்டார்ட் பண்ணா... என்ன ஆச்சர்யம்! ஸ்டார்ட் ஆகி, ஓடத் தொடங்கிடுச்சு. அன்னியிலேருந்து இதுக்கு 'வண்டி கருப்பண்ணசாமி'ங்கற பேரு வந்து தங்கிருச்சு.

# வண்டி கருப்பண்ணசாமி!





மாவட்டத்தில்தான். நிலக்கோட்டை மல்லியை அடித்துக் கொள்ள தமிழ்நாட்டில் வேறெங்கும் மல்லிகைப்பூ இல்லை. மல்லிகை விவசாயத்தை நம்பி திண்டுக்கல் மாவட்டத்தில் ஒரு சமூகமே இருக்கிறது.

### திண்டுக்கல் மல்லி

பெயர்தான் மதுரை மல்லி. ஆனால், அதிகமாக விளைவதென்னவோ, திண்டுக்கல்




ரியூஸ்ஏந்தி பவன்

### கவிஞர் கட்டும் மணிமண்டபம்

மன்னர்கள் மனைவிக்குக் கட்டும் மணிமண்டபம் வெகுசாதாரணம். ஆனால், கவிஞர் பா.தேவேந்திரபூபதி தம் தந்தை பாஸ்கர சேதுபதிக்காக, பழநியை ஒட்டி ஒரு மணிமண்டபத்தைக் கட்டிக் கொண்டிருக்கிறார். கிட்டத்தட்ட மூன்று ஏக்கர் பரப்பளவில் அமையவிருக்கும் இந்த மணிமண்டபத்தை சென்னை ரோஜா முத்தையா லைப்ரரி போல உருவாக்கத் திட்டமாம். சிவில் சர்வீஸ் எக்ஸாமுக்குத் தயாராகிக் கொண்டிருக்கும் மாணவர்களுக்கு இங்கே முன்னுரிமை அளிக்கப்படுமாம். தயாரிப்புப் பணியில் ஈடுபட்டுக் கொண்டிருப் பவர்களுக்கு இலவச மதிய உணவுத் திட்டத்தையும் செயல்படுத்த இருப்பதாகச் சொல்கிறார் கவிஞர் தேவேந்திர பூபதி.

• தேவேந்திர பூபதி



## தியானத்தி



### குறிஞ்சி ஆண்டவர் கோயில்

இது கொடைக்கானலின் பழநி. கோபப்பட்ட முருகன் முதலில் இங்கே தான் அமர்ந்தானாம். பிறகு என்ன ஆனதோ? கோபித்துக்கொண்டு பழநி மலைக்குப் போய்விட்டான். மேகமூட்டம் இல்லாத சமயத்தில் இங்கிருந்து பழநி கோயிலைப் பார்க்கலாம். 1936ல், லீலாவதி என்று பெயர் மாற்றிக் கொண்ட ஆங்கிலே யப் பெண்மணிதான் இந்தக் கோயிலைக் கட்டினாராம். கோயிலைக் கட்டுவதற்குப் பின்னணியில், ராமநாதன் என்ற இந்து மனிதரோடு அவருக்கு ஏற்பட்ட காதல் தான் காரணமாக இருந்திருக்கிறது. 1971லிருந்து இந்தக் கோயில் பழநி தேவஸ்தான கண்ட்ரோலில் இருந்து வரு கிறது. இங்கே குறிஞ்சி ஆண்டவனுக்கு கொடைக்கானல் மலர்களால் நிகழ்த்தப் படும் அர்ச்சனைகள் அழகானவை. 12 ஆண்டுகளுக்கு ஒருமுறை பூக்கும் அபூர்வ குறிஞ்சிப் பூவை இங்கே காண லாம். லீலாவதி தியானத்தில் உயிர்நீத்தது உருக்கம்.

# உயிர்நீத்த லீலாவதி!

### நிலக்கோட்டை பித்தளைப் பாத்திரம்

ஏழைகளின் தங்கம்னா அது பித்தளைதான். பித்தளை யில் செய்யப்பட்ட சமையல் பாத்திரங்கள் முதல் சொப்புப் பாத்திரம் வரை இங்கே படு ஃபேமஸ். 'கடை விரித்தேன்; கொள்வாரில்லை' என்பது போல, சீனப் பொருட்களின் ஆதிக்கத்தால் இப்போது பித்தளையின் வாழ்வு நெளிந்து போயிருக்கிறது!



அறுபடை வீடு... எல்லோர்க்கும் தெரியும். ஏழாவது படை வீடு எதுவென்று தெரியுமா? வள்ளி நாயகன், தேவசேனாபதி என்றெல்லாம் புகழப்படும் முருகப்பெருமானின் ஏழாவது படை வீடாகக் கருதப்படுவது சின்னாளப்பட்டி! 'சுக்குக்கு மிஞ்சிய மருந்துமில்லை. சுப்பிரமணியருக்கு மிஞ்சிய கடவுளுமில்லை!' என்பார்கள்.

இங்கு முருகப்பெருமான் வீற்றிருப்பது, ஆறு முகங்களோடு அல்ல. நான்கு முகம் கொண்டு, சதுர்முக முருகனாக சேவை சாதிக்கிறான். சதுர்முகனாக உருவெடுக்கக் காரணம்? அதுவும் முருகனின் விளையாட்டுகளுள் ஒன்று.




ஓம் என்ற பிரணவ மந்திரத்தின் பொருள் தெரியவில்லை பிரம்மனுக்கு. முருகப்பெருமான் பிரம்மனின் தலையில் குட்டி, சிறையில் அடைத்து விடுகிறான். பிரம்மனின் படைப்புத் தொழிலைத் தானே ஏற்கிறான். பிரம்மனைச் சிறையிட்டாலும் வேதவிதிப்படி சிருஷ்டி செய்ததால் நான்முகம் கொண்டான் போலும்! பிறகு, பிரம்மனுக்குப் பிரணவ மந்திரத்தின் பொருள் உரைக்கிறான்; விடுதலை செய்கிறான்.

# ஏழாவது

விசுவாமித்திரர் பாலதிரிபுரசுந்தரியான அன்னையை எண்ணி தவம் செய்கிறார். காட்சி தந்த தேவியிடம் தம் நெற்றியில் திலகமிடச் சொல்கிறார். அப்போது அன்னை இட்ட குங்குமத் துகள்கள் அங்கிருந்த குளத்தில் சிதறின. அதில், நான்முகம் கொண்ட முருகனின் திருவுரு தென்பட்டது. அதனாலேயே, ஸ்ரீ சுப்பிரமணியர் சுவாமி திருக்கோயிலில் சதுர்முக

**'சுக்குக்கு மிஞ்சிய மருந்துமில்லை. சுப்பிரமணியருக்கு மிஞ்சிய கடவுளுமில்லை!'**



# படைவீடு!

முருகனுக்கு, குங்குமம் கலந்த செம்பால் அர்ச்சனை மிகவும் சிறப்பு. இது வேறெங்கும் காணக் கிடைக்காதது.

குன்றிருக்கும் இடமேறி குமரன் நின்றிருக்க வேண்டும் அல்லவா? இங்கு குன்று இல்லை. அதனால் என்ன?... அவன் சதுர்முகனாகக் காட்சி தரும் ஆலயத்தை, சற்று மேடிட்டுக் கட்டியுள்ளனர். இராஜகோபுர தெற்கு வாசலில் நுழைந்து, கீழ்ப்புறம் நோக்கி நடந்தால், கோயிலின் பிரதான வாசல் கிழக்கில்.

மேடை மீது ஏறினால், முன் மண்டபம். அதனைக் கடந்தால் மகா மண்டபம். இத்திருக் கோயிலை உருவாக்கிய டில்லி குமாரசாமி செட்டியார் குடும்பத்தினரின் சிற்பங்கள் மகா மண்டபக் கல் தூண்களில் காணப்படுகின்றன. அதனையடுத்து அர்த்தமண்டபம், பின்னால் கருவறை. அர்த்தமண்டபத்தின் இருபுறத்திலும் காவலர்களாய் துவாரபாலகர்கள். அர்த்த மண்டபமும் கருவறையும் அகழிகள் கட்டப்பட்டு சூழ்ந்திருக்க, பிராகாரம் அதைச் சுற்றி ஓம் அமைந்துள்ளது.

ஸ்ரீ விநாயகர், ஸ்ரீ தண்டபாணி, ஸ்ரீ பாலசுப்பிரமணியர், குக்குட சுப்பிரமணியர், சண்டிகேசுவரர் ஆகியோர் பிராகாரத்தில் எழுந்தருளியுள்ளனர். உலகம் உய்ய, முருகக் கடவுள் நான்முகம் கொண்டவனாக மயில் மீதமர்ந்து தென்திசை நோக்கிக் காட்சியளிக்கிறார். இராஜ கோபுரம் நோக்கி, மண்டபத்தின் ஈசானிய மூலையில் நவக்கிரக நாயகர்கள். அர்த்தமண்டபத்திலோ விநாயகர். மூலஸ்தானத்தில் வள்ளிநாயகியையும், தெய்வானையையும் உடன் கொண்டு அருள் ஊற்றாகக் காட்சியளிக்கிறார் ஸ்ரீசுப்பிரமணியர். 'நீலச்சிகண்டி ஏறும் பிரான்' என்று அருணகிரி பெருமானால் பாடப்பட்ட முருகப்பெருமானை சின்னாளப்பட்டியில் தரிசிப்போம்; சிந்தை நிச்சயம் குளிரும்!

✉ பஸ் டிரைவர்கள் பணியின்போது செல்ஃபோன் ஓட்டக்கூடாது என்று தமிழக அரசு அறிவித்துள்ளதே என்ற வாசகர் கேள்வியில், அந்தத் தவறான வார்த்தைக்கு அடிக்கோடிட்டதோடு, இப்படித்தான் ஓட்டுநருக்கும் எதில் பேசுவது, எதை ஓட்டுவது என்று குழப்பம் ஏற்பட்டுவிடக்கூடாது என்பதற்குத்தான் என்று அங்கதத்தனமாகப் பதில் கூறியதோடு, கேள்விக்கு ரூ.75/- பரிசும் கொடுத்த தராசு, சாதா தராசு அல்ல. நுட்பமான இயற்பியல் தராசு!

**- பி.ஆர்.மயிலப்பன், ஈரோடு**

✉ தேர்தல் கமிஷன் கடுமையான விதிமுறைகளைக் கடைப்பிடித்து ஜனநாயக முறையில் தேர்தலை நடத்த வேண்டும் என்று வாய்ப்பந்தல் போடுவது கேலிக்குரியதே என்ற தலையங்கம் சரியான சவுக்கடி.

**-கே.எஸ்.கோவிந்தா, சென்னை-42**

✉ பயாஸ்கோப் பகுதியில் யூத் கச்சேரி ரொம்பவே களை கட்டியிருக்குங்க.

**- ஆர்.ஏ.அமுதன், சென்னை - 10**

✉ சக்தி அறக்கட்டளை செய்யும் சாதனைகள் வேலையில்லாப் பெண்களுக்கு ஊக்க மருந்து!

**- லக்ஷ்மி ரங்கராஜன், சென்னை - 101**

✉ வியப்'பூட்டு'கிற தகவல்களோடு பிரமிப்'பூட்டு'கிற வகையில் திண்டுக்கல் சிறப்பிதழ் மனத்துக்குள் சிறைபுகுந்து கொண்டுவிட்டது; யாரும் திறக்க முடியாதபடி!

**- அயன்புரம் த.சத்தியநாராயணன்**

✉ குழந்தைகளைக் கொஞ்சுவதிலும் தனி அழகு வேண்டும் என்பதை சிரிப் பாலஜி சிலபஸ் போட்டு விளக்கியுள்ளது.

**- கே.வி.ராமன், சென்னை - 73**

✉ வைரவிழா மேடையில் வாய்ப்பந்தல் தலையங்கம், வைரமாக நிகழ்ந்தது. ஆவன செய்யப்பட்டால் வ வேற்கலாம்.

**- ரமா ஸ்ரீதர், சென்னை - 9**

✉ பழநியில் ஓடும் குதிரை பூட்டி ஜட்கா வண்டிகள் சுற்றுப்புறச் சூழலுக்கு தீங்கு இல்லை. இதுபோல் சென்னை யிலும், கோயில்கள் இருக்கும் இடங்களி குதிரை வண்டி வலம் வந்தால், புகையி தீமை சிறிதளவாவது குறையும். இதற்கா சில இடங்களில் மெதுவாகச் செல்லு வாகனங்களுக்கு ஒரு வழி இருப்பது சிறந்தது.

**- பி.நாகலட்சுமி, சென்னை - 4**

✉ சிங்(ே)காரச் சென்னையில் சுவ களில் வரையப்பட்ட ஓவியங்கள் சீர்கெட டுப் போயிருப்பதை, வண்ணப் புகை படங்கள் மூலம் வெளிப்படுத்தியிருக்கிறீ



கள். இனியாவது அந்த ஓவியங்கள் புத்துயிர் பெறுமா?

- கே.தெய்வசிகாமணி, சென்னை - 5

✉ கொடைக்கானல் துளிகள் தேன் துளியாக இனித்தன. கடவுளின் கெஸ்ட் ஹவுஸை நேரில் சென்று பார்த்த உணர்வு!

- ஜே.துரைராஜ், சென்னை-87

✉ தவறான பொருள் தொனிக்கும் கேள்வி தொடுத்த வாசகரின் மனம் புண் படாமல் பதில் கூறி, பரிசும் தந்த, தராசின் நல்ல உள்ளம் வாழ்க!

- எம்.சம்பத், வேலாயுதம்பாளையம்

✉ இன்றைய மருத்துவ விஞ்ஞானப் படி உடலும் மனமும் நோய்வாய்ப்பட் டால், சிகிச்சைதான் தீர்வு என்பது நூற்றுக்கு நூறு உண்மை. தியானமும் தேவையானது தான்.

- எம்.மிக்கேல் ராஜ், சாத்தூர்

✉ கமல்ஹாசனின் நேர்முகம் சற்று அதிகப்பிரசங் கித்தனமாக அமைந்தாலும், அது அவரது தன்னம்பிக்கை யின் அடையாளம் என்றே நினைக்கத் தோன்றுகிறது.

- ஆர்.கே.லிங்கேசன், மேலகிருஷ்ணன்புதூர்

✉ சும்மா போன அம்மா விசிட் சுவை யாக இருந்தது. இனி எப்போதுமே அந் தம்மா பக்கம் இந்தம்மா நெருங்க இயலாது!

- அ.சம்பத், கோயம்புத்தூர்

✉ பக்கத்து வீட்டைப் பற்றியே அறிய முடியாத இந்தக் காலத்தில், ஒவ் வொரு மாவட்டத்தைப் பற்றியும், அவற்றின் முக்கிய இடம், கலாசாரம், நிறை, குறைகளையும் அறிய உதவும் கல்கி உலகைக் காண ஒரு ஜன்னல்!

- எஸ். மீனா, ஸ்ரீரங்கம்

✉ கொடைக்கானலின் கொண்டாட்ட மான பகுதிகள் குறித்த செய்திகளும், படங் களும், அந்தக் குளுகுளு வாசஸ்தலத்தைச் சுற்றி வந்த 'ஜிலீர்' அனுபவம்!

- என்.பாலகிருஷ்ணன், மதுரை

✉ திண்டுக்கல் மாவட்ட ஸ்பெஷல், சுற்றுலா செல்ல பயனுள்ள மினி டைரி!

- எஸ்.முரளி, ஸ்ரீரங்கம்

வட்டமேஜை

# இயற்பியல் தராசு!

✉ கலப்புமணக் குழந்தை கள் சாதிச் சான்றிதழில் தந்தையின் சாதி யைத்தான் போட்டுக் கொள்ள வேண் டும். எனவே, காதலித்துச் செய்துகொள் ளும் கலப்பு மணத்தால் பெண்ணின் சாதிதான் களையப்படுகிறதே தவிர, ஆணின் சாதி தொடர்கிறது. இதில் எப் படி சாதிய வேறுபாடுகள் மறைகின்றன? கலப்புமணத் தம்பதியர்க்குப் பிறக்கும் குழந்தைகளை 'சாதியற்றோர்' என்ற பட் டியலில் பதிந்து, சலுகைகளும் கொடுத் தால்தான் கலைஞரின் கனவு நனவா கும்.

- ப்.ஆழ்வாரப்பன், அன்னூர்

## திருச்சி மாவட்ட வாசகர் சந்திப்பு!

# நீங்கள் எங்கள் வேர்கள்!

மனசு மயங்கும் மாலை வேளை. திருச்சி, அஜந்தா ஹோட்டல் கூட்ட அரங்கில் குவியத் தொடங்கினர் கல்கி வாசகர்கள். இந்திரா காந்தி கல்லூரி மாணவிகள் தமிழ்த்தாய் வாழ்த்து பாட, இனிதே தொடங்கியது விழா. அதிலிருந்து சில துளிகள்...

● ''கல்கி வார இதழ் மீது, வாசகர்கள் வைத்திருக்கும் அன்பு மிக உயர்வானது. உங்கள் ஊரில் நடக்கும் எங்கள் விழாவுக்கு வருகை தந்திருக்கும் வாசக நெஞ்சங்களையும் முகவர்களையும் 'குட் நியூஸ் க்வீன்' திருமதி.கே.மீனா அவர்களையும் வருக வருக என வரவேற்கிறேன்'' என தமது வரவேற்புரையில் குறிப்பிட்டார் ஆசிரியர் சீதா ரவி.

● ''சமூகத்தின் மீது மிகுந்த அக்கறையுடனும் தேச நலன் சார்ந்தும் சமூகப் பொறுப்புடன் இயங்கி வரும் பத்திரிகை கல்கி. அதன் வாசகர் வட்ட விழாவில் கலந்துகொள்வது எனக்குப் பெருமை. பள்ளி மாணவனாக திருச்சிக்கு வந்து சேர்ந்தார் அமரர் கல்கி. பால்யத்தில் அவருக்கு சுதந்திர வேட்கை அதிகம். படிப்பதில் இடை நின்று, சுதந்திரப் போராட்டக் களத்தில் இயங்கினார் கல்கி. ஓராண்டு சிறைவாசம். அங்கு தமது முதல் குறுநாவலை எழுதினார். பள்ளி மாணவனாக வந்திருந்தவரை, பத்திரிகை உதவி ஆசிரியராக சென்னைக்கு அனுப்பி வைத்தது திருச்சி!'' எனக் குறிப்பிட்டார் இந்திராகாந்தி கல்லூரி முதல்வர் டாக்டர் கே.மீனா.



● முதல்வர் டாக்டர் கே.மீனா.

● வார்த்தைப் பூக்களைச் சரமாகத் தொடுத்து நிகழ்ச்சியினைத் தொகுத்து வழங்கினார் கார்த்திகா. திருச்சி மாவட்டச் சிறப்பிதழ்கள் குறித்தான வாசக விமர்சனக் கடிதங்களில் சிறந்த இரண்டினைத் தேர்வு செய்து வாசித்தார், உதவி ஆசிரியர் கதிர்பாரதி.

● சிறந்த விமர்சனக் கடிதம் எழுதிய இந்திராகாந்தி கல்லூரி மாணவிகள் ஐஸ்வர்யா, சாந்தி இருவருக்கும் சிறப்புப் பரிசு அளிக்கப்பட்டது.

● முகவர்கள் மாறன், ஆண்டியப்பன், ரெங்கநாதன், சரவணன் மற்றும் முகமது அலி ஆகியோருக்கு நினைவுப் பரிசுகள் வழங்கப்பட்டன. நிகழ்ச்சிக்கு வந்திருந்த வாசகர் வெங்கடராமன் தஞ்சாவூர் ஓவிய மகாலெட்சுமி படத்தினை, ஆசிரியருக்குப் பரிசாக அளித்தார்.

● ''வேர்களின் விஸ்தாரத்தைப் பொறுத்துத்தான், ஒரு தாவரத்தின் பசுமை விரிவு பெறுகிறது. எங்களின் வேர்கள் நீங்கள்தான்'' எனக் கூறி வாசகர் கலந்துரையாடலைத் தொடங்கி வைத்து வழிநடத்திச் சென்றார், உதவி ஆசிரியர் அமிர்தம் சூர்யா.

● 'கல்கி - கல்கியாகவே இருக்கிறது. மன நிறைவு தருகிறது' என்றார் எழுத்தாளர் ரிஷபன். 'மாற்றம் தேவை இல்லை!' என்றார் எழுத்தாளர் ஆங்கரை பைரவி

முழுப்பக்க வண்ணப் படங்களைத் தவிர்த்து, படைப்புகளைக் கூடுதல் ஆக்க லாம்' எனக் கோரிக்கை வைத்தவர் பொன் மலை ஆர்.பிரகாஷ். 'சமூக அவலங்களைச் சுட்டெரிக்கும் பீரங்கி - கல்கி' என முழங் கினார் டோல்கேட் காமராஜ். 'ரொம்ப வரு டமா எழுதிக்கொண்டிருப்பவர்களுக்கும், புதிதாக எழுத வருபவர்களுக்கும் சம அள வில் வாய்ப்பு அளிக்க வேண்டும்!' என வேண்டுகோள் விடுத்தார் கிரிஜா மணா ளன்.

● ''கல்கி திருச்சி மாவட்டச் சிறப் பிதழில், துவாக்குடி-அரியமங்கலம் நாற்கர சாலையில் சர்வீஸ் ரோடு போடப்படாதது குறித்து, 'யமன் சாலை' எனக் கட்டுரை வெளியானது. அது துறை சார்ந்த உயர் அதிகாரிகள் பார்வைக்குப் போனது. தற்போது அந்த சர்வீஸ் ரோடு, குறிப்பிட்ட பகுதி யில் போடப்பட இருக் கிறது. இது கல்கி பத்திரி கையினால் அப்பகுதிப் பொதுமக்களுக்குக் கிட் டிய வெற்றி!'' எனக் குறிப்பிட்டார் கைலாச


✱ ரிஷபன்

**சிறந்த ஸ்லோகன்: திருச்சியின் உயரம் மலைக்கோட்டையில் தெரியும்; வாசகர் கலை நெஞ்சம் கல்கிக்குப் புரியும்!**

நகர் இமயவரம்பன்.



● திருச்சி மாவட்டச் சிறப்பிதழில் வெளியான புதிர்ப் போட்டிகளுக்கான சரியான விடைகளை எழுதி, குலுக்கல் மூலம் தேர்வான வாசகர்களுக்குப் பரிசுகள் வழங் கப்பட்டன. சிறந்த ஸ்லோகன் எழுதிய வாசகர் வி.சி.வெங்கடேஷுக்குச் சிறப்புப் பரிசும் வழங்கப்பட்டது.

''பெரிய மாற்றங்கள் தேவையில்லை என்கிற கருத்து பரவலாகச் சொல்லப்பட் டுள்ளது. வாசகர்கள் புதிதாக சிற்சில மாற் றங்களை அவையில் முன் வைத்துள்ளனர். அவற்றை எங்கள் ஆசிரியர் குழு கவ னத்தில் கொண்டுள் ளது!'' என நன்றியுரை யில் கல்கி குழும இதழ் களின் உதவி ஆசிரியர் ஸ்ரீநிவாசராகவன் கூற, விழா இனிதே நிறைவு பெற்றது.


✱ கிரிஜா மணாளன்

**- ஸ்ரீரங்கம் திருநாவு**





"ஏன் இப்படி திடீர்னு டீவி தொடர் பார்க்கறீங்க?"

"என் அம்மாவோட ஆத்மா சாந்தியடையற விதமா அவங்க பார்த்த சீரியல் எல்லாம் நான் பார்க்கறேன்."

- சாயம்வெ.ராஜாராமன்





"விலைவாசி உயர்வைக் கட்டுப்படுத்தாவிட்டால் சாகும் வரை சாகாவிரதம் இருப்பேன் என்று எச்சரிக்கின்றேன்."

- சாயம் வெ.ராஜாராமன்



"விளையாட்டு விளையாகிடும்ங் கறது சரியாப் போச்சு..."

"எப்படிச் சொல்றே?"

"விளையாட்டா அவ பின்னால சுத்தினேன். அவளையே எனக்குக் கல்யாணம் பண்ணி வெச்சுட்டாங்க."

- ஈரோடு எஸ்.அபிராமிஸ்ரீ.

# விடமாட்டேன் ப்ரியா!

"என்னைக் கைவிட்டுட மாட்டீங்களே சுரேஷ்?"

"கையில இவ்வளவு மோதிரம் போட்டிருக்கியே... விட்டுடுவேனா ப்ரியா?"

- சாயம் வெ.ராஜாராமன்

"குற்றம் பார்க்கின் சுற்றம் இல்லை. இது மாதிரி வேற ஒரு பழமொழி சொல்லு."

"சீரியல் பார்க்கின் சமையல் இல்லை."

- சாயம் வெ.ராஜாராமன்



"அந்தப் பொண்ணுக்குக் காது கேக்காதுப்பா!"

"உனக்கு எப்படி தெரியும்?"

"ஐ லவ் யூன்னு சொன்னேன். பதிலுக்கு செருப்பு புதுசுங்கிறா!"

- ஜி.லட்சுமிபதி, சென்னை-88.

# நன்றி... நன்றி... நன்றி!

**தி**ண்டுக்கல் மாவட்டச் சிறப்பிதழ்களைச் சிறப்பாகத் தயாரிக்க ஆலோசனை வழங்கி கடிதங்கள் குவிந்தன. தேர்ச்சியான தகவல்கள், படங்கள், நம்பகத்தன்மையான விவரங்கள்.. என அசத்திய வாசகர்களின் பட்டியல் இது. உங்கள் உதவியால்தான் இந்த இதழ்களைச் சிறப்பாகத் தயாரிக்க முடிந்தது. உங்களுக்கு ஒரு சபாஷ் சல்யூட்!

(ஆர்.:

● என்.ஏ.லதா, சண்முகபுரம் ● ஐ.க.வேம்பு, பழநி ● முனைவர் ஆர்.பாண்டியன் நந்தவனப்பட்டி ● பூர்ணா, குடவதிநகர் ● முத்துவிஜி, மும்பை ● எஸ்.விஜயா சீனிவாசன், திருச்சி ● கே.மகாலெட்சுமி, திண்டுக்கல் ● ஜெ.ஹரிப்ரியா, புதுச்சேரி ● ஆர்.ஆர்.பூபதி, திண்டுக்கல் ● சுஜாதா கணேஷ், சென்னை-87 ● இரா. ஞான மாணிக்கம், காவேரிநகர் ● ஆர். மாதவராமன், கிருஷ்ணகிரி ● ஏ.விக்டர் ஜான் கொளத்தூர் ● எஸ்.கார்த்திகேயன், பரோடா ● ஏ.கே.பாலசுப்பிரமணி, இடையக்கோட்டை ● ஏ.ஆண்டனி பாஸ்கர், திண்டுக்கல் ● ஆர்.கவிதா, திண்டுக்கல் ● எல்.மாறன் மேல்பட்டி ● டி.ஜி.நாராயணராவ் ● இரா.கணேசன், சேலம் ● ஆர்.அனுராதா ரவீந்திரன், திருச்சி ● ஜா.பவுலின் குளோரி ஜெயந்தி, ச.ஆரோக்கியதாஸ், ஆ.பிரான்ஸிஸ் துரைராஜ், ராஜா, திண்டுக்கல் ● கலைபாரதி, சித்தமல்லி ● தமிழ்ப்பித்தன், திண்டுக்கல் ● வாழைக்குமார், நிலக்கோட்டை.




திண்டுக்கல் மாவட்டச் செய்திகள்: கதிர்பாரதி. ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / CC (S) DN / 144 / 09 -11 * Licensed post without prepayment under PMG's Licence No. WPP TN / CC (S) DN / 70 / 09 - 11* Registered as a Newspaper in Srilanka.

